# கல்கி

KALKI
30.11.97
ரூ. 4.00



# அஞ்சலி

# இளமை தரும் காந்தங்கள்



எல்லா நோய்களுக்கும் காந்த சிகிச்சைக் கருவிகளின் மூலம் குறைந்த செலவில் மிக எளிய முறையில் நீங்களாகவே சிகிச்சை செய்துக் கொள்ளலாம். இந்த சிகிச்சையினால் பின் விளைவு, பக்க விளைவு எதுவும் இல்லை. மேலை நாடுகளில் புகழ்பெற்ற இந்த சிகிச்சையின் மூலம்





பருத்த வயிற்றை சுருங்கச் செய்யவும், ஆஸ்துமா, இடுப்பு வலி, சிறுநீரகக் கோளாறுகள், சைனஸ், தலைவலி, மூட்டு பிடிப்புகள், தோல் வியாதிகள், மகளிரின் மாதவிடாய் மற்றும் மார்பகக் கோளாறுகள், கழுத்து எலும்புத் தேய்வு, கண், காது, மூக்கு தொண்டை கோளாறுகள் உள்ளிட்ட பல நோய்களுக்கும் இந்த சிகிச்சையின் மூலம் பயன் பெறலாம். உடலுக்கும், காந்த நீர் தயாரிக்கவும் உயர் சக்தி காந்தத்தை தபால் மூலம் பெற ரூ. 460/-



*பெண்களுக்கு பருத்த வயிற்றை குறைக்கவும், மாதவிடாய், இடுப்பு வலி, கருப்பை, வெள்ளைப்பாடு, சினைப்பை கோளாறுகளை நீக்கவும் உபயோகியுங்கள் காந்த வயிற்றுப் பட்டையை. தபால் மூலம் பெற ரூ. 220/-*

**ஆஸ்துமா, மார்பு வலி, மூச்சுத்திணறல், மார்புச்சளி, இருதயக் கோளாறுகளை சரிபடுத்த ஆஸ்துமா மணிமாலையை அணியுங்கள். தபால் மூலம் பெற ரூ. 120/-**

**இலவசம்** இந்த விளம்பரத்தை 10.12.97க்குள் அனுப்புவதுடன் ரூ.500/- மேல் கருவிகளை வாங்குபவருக்கு ரூ.100/- மதிப்புள்ள காந்த சீப்பு இலவசமாக அளிக்கப்படும்.

இலவச ஆலோசனைக்கு சுய விலாசமிட்ட இரண்டு ரூபாய்த் தபால் தலை ஒட்டிய கவர் அனுப்புக V.P.P. கிடையாது.

## காந்த சிகிச்சை ஆராய்ச்சி நிறுவனம்

பிளாட் 60, ஜீவன்லால் நகர், (என்பீல்டு எதிரில்)
திருவொற்றியூர், சென்னை - 19.
போன் : 545207, 545235

**Rs. 20,000/- முன்பணம் கட்டகூடிய ஸ்டாகிஸ்ட் தேவை**

# சதாசிவம் — ஒரு சகாப்தம்

பழுத்த பழமாக தமது 95-வது வயதில் உயர்திரு சதாசிவம் அவர்கள் அமர நிலை எய்தியதை கனத்த இதயத்துடன் இங்கு பதிவுசெய்கிறோம்.

பலர் சரித்திரத்தால் உருவாக்கப்படுகிறார்கள்; சிலர்தாம் சரித்திரத்தை உருவாக்குகிறார்கள். சதாசிவம் இரண்டாவது வகையைச் சேர்ந்தவர்.

அமரர் 'கல்கி' அவர்கள் காலமானபோது, 'தேய்பிறை காணாத பூரண சந்திரனாக அப்படியே மறைந்து போனார்' என்று ராஜாஜி குறிப்பிட்டார். 'கல்கி'யின் ஆருயிர் நண்பர் சதாசிவமோ மங்காத, மறையாத நிரந்தர வானவில்லாக ஜொலித்து வந்தார்.

சாதனையாளர்கள் என்று நாம் கருதுகின்ற பலரும் ஏதேனும் ஓர் அம்சத்தில் அல்லது இரண்டு அம்சங்களில் சாதனை புரிந்தவர்களே. ஆனால் சதாசிவம் அவர்களோ, வானவில் போன்று பல துறைகளில் சாதனைகள் புரிந்து வர்ணஜாலம் காட்டியவர்.

தொடக்கத்தில் சுப்பிரமணிய சிவா

• 94-ல்....





• தம்பதி சமேதராக....

அவர்களால் ஈர்க்கப்பட்டு, பள்ளியிலிருந்து வெளியேறி, தீவிரவாதியாக அரசியலில் புகுந்தவர், பின்னர் காந்திஜியின் சத்தியாகிரஹ மார்க்கத்துக்குத் திரும்பி, சுதந்தரப் போராட்டத் தியாகியாக விளங்கினார். பலமுறை சிறை சென்றதோடு, அண்ணலின் ஆக்கப் பணிகளுள் ஒன்றான கதர் பிரசாரத்திலும் விற்பனையிலும் சாதனைகள் புரிந்தார். ராஜாஜியின் அபிமானத்தை அந்த ஆரம்ப நாட்களிலேயே பெற்றார்.

சிறைச்சாலை என்பது வீண் பொழுதுபோக்கும் இடமாக இருக்கவில்லை. கட்டாயக் கடும் உழைப்பு போக, மிச்சமிருந்த நேரத்தையெல்லாம் சிறந்த நூல்களைப் பயின்று, இலக்கிய ஆர்வத்தையும் அறிவையும் வளர்த்துக் கொள்ளும் பல்கலைக் கழகமாக சதாசிவம் போன்ற ஆர்வலர்களுக்கு விளங்கியது.

சிறைச்சாலையில் தாம் சந்தித்த கல்கி அவர்களுடன் நட்பு ஏற்பட்டு, அந்த ஆழ்ந்த சிநேகம் ஒருவருக்கு ஒருவர் பக்கபலமாக இருக்க, இருதரப்பிலும் சாதனைகளுக்கு வழிவகுத்தது. சிறந்த இரட்டைக் கலைஞர்கள் பாடும்போது மாறி மாறி சுவரப்பிரஸ்தாரம் செய்வது போல, பல்வேறு சமுதாய - கலைப் பணிகளை அவர்கள் நிறைவேற்றிக் கொண்டே போனார்கள். பிற்காலத்தில் "கல்கி சதாசிவம்" என்று அழைக்கப்படுவதிலேயே பெருமிதமடைந்தார் சதாசிவம்.

பத்திரிகைத் துறையில் சதாசிவம் செய்த சாதனைகள் அளப்பரியவை. விளம்பரங்கள் பெறுவதை ஒரு கலையாக வளர்த்தவர் அவர். இன்று போல மார்க்கெட்டிங் நுணுக்கங்கள் எல்லாம் நூல்களாக எழுதப்படாத காலத்திலேயே, அவற்றைப் பயிலாமலேயே இயல்பாகக் கையாண்டவர் சதாசிவம். முதலில் ஆனந்த விகடனுக்கும் பிறகு கல்கி பத்திரிகைக்கும் உறுதியான அஸ்திவாரமிட்டவர் சதாசிவமே.

'கல்கி', மீ.ப. சோமு ஆகியோருக்குப் பிறகு கல்கி பத்திரிகையில் ஆசிரியர் பொறுப்பையும் ஏற்று, அதன் விற்பனை

எண்ணிக்கையை மட்டுமின்றி, அதன் கௌரவத்தையும் பன்மடங்கு உயர்த்தினார். ஏராளமான எழுத்தாளர்களை உருவாக்கினார். இன்றைக்குப் பத்திரிகைத் துறையில் கையாளப்படுகிற பல உத்திகளுக்கும் முன்னோடிகளாக விளங்கியவர்கள் 'கல்கி'யும் சதாசிவமுமே.

திரைப்படத் துறையில் புகுந்து, சகுந்தலை, மீரா என்ற இரு அற்புதமான படங்களைத் தயாரித்தார். திரைப்பட வரலாற்றில் இவை மூலம் நிரந்தர இடம் பெற்று விட்டார் சதாசிவம். நேருஜியும் சரோஜினி நாயுடுவும் ராஜாஜியும் பார்த்து மகிழ்ந்து போற்றுகிறவிதமாக ஹிந்தி மீரா திரைப்படம் அமைந்தது எனில் சதாசிவத்தின் பெருமைக்கும் திறமைக்கும் அதைவிட சான்று வேறு என்ன வேண்டும்?

ஏராளமான தொழிலதிபர்களைத் தமது நண்பர்களாகப் பெற்றிருந்த சதாசிவம், பத்திரிகைத் தொழிலில் மிகச் சிறந்த நிர்வாகியாகவும் விளங்கினார்.



• நேருஜியுடன்...

இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல் என்பது

• கல்கி, ராஜாஜியுடன்...



• இருபதில்...

அவர்களிடம் உருவான அனுதாபத்தால் மட்டுமல்ல. சதாசிவம் அத்துறையில் செய்திருக்கிற சாதனைகளை உணர்ந்திருப்பதால்தான். ஸ்ரீமதி எம்.எஸ். என்கிற வைரத்தைக் கண்டெடுத்து, அதனைப் பட்டை தீட்டி எவரெஸ்ட் சிகரத்தில் ஏற்றி வைத்துப் பிரகாசிக்கச் செய்தவர் சதாசிவம். கிராமப்புறத்தில் ஒரு கச்சேரி என்றாலும் ஐ.நா. சபைக் கச்சேரி என்றாலும் ஒவ்வொன்றையும் திட்டமிட்டுச் செய்ததுடன், எம்.எஸ். அவர்கள் எதைப் பாட வேண்டும், எப்படிப் பாடவேண்டும் என்பதற்கெல்லாம் யோசனைகள் கூறி வளர்த்தவர் அவரே. பரதநாட்டியக் கலை மறுமலர்ச்சி காண வேண்டும் என்றபோதும் தமிழிசை இயக்கத்துக்கு ஆதரவு தேட வேண்டும் என்ற போதும் 'இதோ நான் தயார்' என்று சதாசிவம் முன்வந்ததுடன் எம். எஸ். அவர்களையும் அவற்றில் ஈடுபடுத்தி, அத்துறைகள் முன்னேறப் பெரிதும் உதவினார்.

நாடு சுதந்தரம் பெற்று சில காலம் சென்ற பிறகு சக்திவாய்ந்த ஓர் எதிர்க்கட்சி தோன்ற வேண்டியது அவசியம் என்ற கருத்தோடு சுதந்திரா கட்சி துவங்கி ராஜாஜி செயல்பட்டபோது, அவருக்கு வலதுகரமாக விளங்கி, கட்சிக்கு ஏராளமாக நிதி வசூல் செய்து தந்தார்;

• நாற்பதில்...

வள்ளுவர் பெருமான் வாக்கு. நவீன நிர்வாகத் தத்துவத்தை உள்ளடக்கிய இந்தக் குறள் வழியில் சென்று வெற்றிகளைக் குவித்தவர் சதாசிவம்.

கலை உலகமே திரண்டு வந்து சதாசிவத்துக்கு இறுதி மரியாதை செலுத்தியது என்றால் அது எம். எஸ்.

நெகிழ்ந்து குறிப்பிடும் அளவுக்கு அணுக்கத் தொண்டராக இருந்தார்.

தன்னலம் என்ற சொல்லுக்கு அர்த்தமே தெரியாதவர் சதாசிவம். தாம் சம்பாதித்ததை மட்டுமின்றி தமது மனைவி எம்.எஸ். அவர்கள் மூலம் ஈட்டிய கோடிக்கணக்கான ரூபாய்களையும் பல்வேறு அறப்பணிகளுக்கே வழங்கிய வள்ளல். பாரதி மணிமண்டபம், காந்தி மண்டபம் தொடங்கி சங்கர நேத்ராலயா வரை அவர் பெயரைச் சொல்லிக் கொண்டு இன்னமும் சமுதாயப் பணிகள், கல்வி ஸ்தாபனங்கள், தொண்டு நிறுவனங்கள், ஆலயங்கள் எத்தனை எத்தனையோ. தனி மனிதர்களுக்கும் வலதுகரம் தந்தது இடது கரம் அறியாமல் வாரி வழங்கியிருக்கிறார்.

• அறுபதில்...

ஆதரவு பெற்றுத் தந்தார். தமது பத்திரிகை மூலம் ராஜாஜியை தொடக்ககாலத்திலிருந்தே ஒவ்வொரு காரியத்திலும் ஆதரித்து வந்தவர், அப்போது கல்கியை சுதந்திரா கட்சியின் பிரசார சாதனமாகவும் பயன்படுத்தினார். சுயராஜ்யா பத்திரிகையை நடத்தும் பொறுப்பை காஸா சுப்பாராவ் அவர்களிடமிருந்து ஏற்று உதவினார். ராஜாஜியின் கருத்துக்களுக்கு வாகனமாக விளங்கிய அந்த ஏடு, பாரதத் தலைவர்கள் மட்டுமல்ல; உலகத் தலைவர்கள் படிக்கின்ற முக்கிய வார இதழாக விளங்கியது. "ராமருக்கு லட்சுமணன் மாதிரி எனக்கு சதாசிவம்" என்று ராஜாஜி மனம்

இத்தனையிலும் ஊடுருவியது அவருடைய இறையுணர்வு. வானவில்லின் வண்ணங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்தால் கிடைக்கின்ற சூரிய ஒளி அது. அந்த ஒளி அவரது ஒவ்வொரு காரியத்திலும் ஊடுருவி அதனை பிரகாசிக்கச் செய்தது. அதனால்தான் அவர் உருவாக்கி நடத்திய கல்கி பத்திரிகை, வளர்த்து போஷித்த எம். எஸ். அவர்களின் இசை, சதாசிவம் தம்பதியை நெருங்கி வந்த உள்ளங்கள் ஆகிய அனைத்திலும் இந்த ஒளி ஏற்றப்பட்டது.

இத்தகைய ஒரு மகத்தான மனிதரை மாமனிதர் என்று சொன்னாலும் போதாது; இந்த தேசத்தின் சிறந்த பாரம்பரியப் பண்பாடுகளின் ஒட்டுமொத்த உருவம் என்றுதான் வர்ணிக்க முடியும்.

அவரை இழந்து தவிக்கின்ற எம். எஸ். அவர்களுக்கும் மற்றும் குடும்பத்தினர் அனைவருக்கும் நாம் என்ன ஆறுதல் கூற முடியும்? - லட்சோபலட்சம் கல்கி வாசகர்களும் கோடிக்கணக்கான தமிழர்களும் அதனினும் பன்மடங்கான அனைத்துலக இசை ரசிகர்களும் உங்கள் துயரத்தைப் பகிர்ந்து கொள்கிறார்கள் என்பது தவிர? ●

அட்டை, வண்ணப்படம் : **யோகா**

தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

5 கலர் டிவி

10 தங்க வளையல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 1000/-

25 தங்க லாக்கட்கள் 1/2 பவுன்

200 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 500/-

400 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 250/-

UJALA
FOR SUPER WHITENESS OF CLOTHES

UJALA

**உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்**

இப்போது உஜாலாவின் டாம்ப்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்றநாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்



Write to : **Jyothy Laboratories (UJALA)**, 2- A. Singarayar Mansion, Abhirami Avenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.

# காதில் விழுந்தவை!



● "வெளி மாநிலங்களில் பதிவுசெய்யப்பட்ட கார்கள் தமிழ் நாட்டில் நுழைவு வரி கட்ட வேண்டும்; இல்லையேல் பறிமுதல் செய்யப்படும்" என்று தமிழக அரசு சமீபத்தில் உத்தரவு போட்டு, அதற்குக் கால அவகாசம் கொடுத்திருந்தது. அந்தக் கால அவகாசத்துக்குள் வரி கட்டாதவர் சிலரின் கார்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அப்படிப் பறிமுதல் செய்யப்பட்டதில் 'இந்தியன்' பட டைரக்டரின் விலையுயர்ந்த காரும் ஒன்று. இதற்கு ஃபிளாஷ்பேக் ஒன்று இருக்கிறதாம். டைரக்டர் சங்கர் கே.கே. நகர் ஆர்.டி.ஓ. அலுவலகத்தில் 'லைசென்ஸ்' வாங்க வந்தபோது, அங்கிருந்த 'பணப் புழக்கத்தை' நான்கைந்து மணி நேரம் இருந்து கவனித்திருக்கிறார். பின்னர் கொஞ்சம் மெருகேற்றி, படத்தில் ஆர்.டி.ஓ. ஆட்களைப் பிடி, பிடியென்று பிடித்து விட்டார். "அதற்குப் பழிவாங்கும் விதமாகத்தான் குறிவைத்து காரை பறிமுதல் செய்து விட்டார்களோ" என்று சென்னையில் ஓடும் இதர வெளிமாநில பதிவு கார்கள் கிசுகிசுக்கின்றன!

● தமிழக அரசில் உள்ள ஜூனியர் அமைச்சர்களுக்குச் சென்னையில் இருக்கும் செல்வாக்கு மிக்கவர்களிடமிருந்து பிடுங்கல்கள் அதிகம். அவை போதாதென்று தெற்குப் பக்கத்திலிருந்தும் ஏகமாய் வருவதுண்டு. "அண்ணன் சொல்லியனுப்பிச்சார்" என்று அதிகாலையிலேயே வந்து ஆட்கள் நிற்பார்கள். மாலையானால் அண்ணனே தொலைபேசியில் "என்னாச்சு?" என்று கேட்பார். மதுரையிலிருந்து தொலைபேசி என்றாலே அமைச்சர்களோடு சேர்ந்து உதவியாளர்களும் அலறுகிறார்கள்.

● ஐ.மு.வில் தி.மு.க. தொடர்ந்து இருக்குமா? அல்லது வெளியேற்றப் படுமா? அல்லது வெளியேறிவிடுமா? இதைப் படிக்கும் போது இந்த கேள்விகளுக்கெல்லாம் விடை தெரிந்திருக்கலாம். எது எப்படியிருந்தாலும், ஐ.மு.வில் தி.மு.க. தொடர்ந்து இருந்தால் சோமுவின் இடத்திற்குக் கோவை ராமநாதன் அல்லது கே.பி. ராமலிங்கம் ஆகிய இருவரில் ஒருவருக்கு 'சான்ஸ்' அடிக்குமாம். அமைச்சரவையிலிருந்து தி.மு.க. வெளியேறினால், சென்னையில் தமிழக அரசிற்கு உதவும்விதமாக மாறனுக்கு முக்கியப் பொறுப்பு கொடுக்கப்படலாமாம். இவையெல்லாம் தி.மு.க. வட்டாரத்தில் உலவும் செய்திகள்.

● பஸ், லாரி சேஸிஸ் (பாடி கட்டாத நிலையிலுள்ளது) உற்பத்தி செய்யும் அந்தக் கம்பெனி சங்கடத்தில் இருக்கிறது. மாநகரப் பேருந்துகள் மற்றும் மாநகராட்சிகளுக்கு சேஸிஸ் சப்ளை செய்வதில் 'கமிஷன்' சமாசாரம் விளையாடுகிறதாம். "நல்லாட்சி கொடுக்க வேண்டுமென்று கலைஞர் மட்டும் நினைத்தால் போதுமா?" என்று கேட்கிறார்கள் கம்பெனிக்காரர்கள்.

● வாழப்பாடி பேரணியில் கேட்டது : பேனரில் 'அன்னையே' என்று எழுதப்பட்டு சோனியா படம் வரையப்பட்டிருந்தது. அதைப் பார்த்த ஒருவர், 'நல்லவேளையாக சோனியா படத்தைப் போட்டு விட்டார் வாழப்பாடி. இல்லையென்றால் 'அன்னையே' என்று யாரைச் சொல்கிறார் என்று புரிந்திருக்காது.

— தில்லப்பா

## ஃப்ளாஷ்பேக்கில் மாட்டிய டைரக்டர்!



# மீண்டும் கும்ப்ளே!

'இந்திய கிரிக்கெட்டுக்கு ஒரு ஷைன் வார்னே' என்று வர்ணிக்கப்பட்டு, குறுகிய காலத்தில் அணியின் உதவி கேப்டனாகவும் ஆக்கப்பட்டவர் அனில் கும்ப்ளே. அவர் உயர்ந்து கொண்டிருந்த அதே வேகத்தில் சரிவும் ஏற்பட்டு, அணியிலிருந்து நீக்கப்பட்டார். தற்சமயம் மீண்டும் அணியில் இடம்பெற்றிருக்கும் கும்ப்ளே, தாம் நீக்கப்படவில்லை; வெறும் ஓய்வுதான் தரப்பட்டிருந்தேன் என்கிறார். கல்கிக்கு அவர் அளித்த பிரத்தியேகப் பேட்டியில் பர்ஸனலாக அவரைப் பற்றிவரும் கிசுகிசுக்களுக்கும் முற்றுப்புள்ளி வைக்கிற விதமாகப் பேசினார். இனி பேட்டி :

**கல்கி** : இந்திய - பாக் அணிகளுக்கு இடையிலான மேட்சுகளிலும் பாகிஸ்தானில் நடந்த இந்திய சுதந்தரதின பொன் விழா மேட்சுகளிலும் நீங்கள் நமது அணியிலிருந்து நீக்கப்பட்டதேன்?

**கும்ப்ளே** : மெஷின் மாதிரி நான் தொடர்ந்து விளையாடியதன் காரணமாக எனக்கு ரெஸ்ட் கொடுக்க நினைத்தார்கள். அதன் காரணமாகவே விலக்கப்பட்டேன். மற்றபடி என் ஆட்டம் சிறப்பாக இல்லை என்றெல்லாம் விபரீத யூகங்களுக்கு இடம் கொடுக்க வேண்டாம்! இந்திய தேர்வுக் கமிட்டித் தலைவர் ராமாகாந்த் தேசாயே இதை உறுதிப்படுத்தியிருக்கிறாரே!

**கல்கி** : ஆனால், இலங்கை சுற்றுப் பயணத்தின் போது உங்கள் ஆட்டம் சரியில்லை என்று அணியின் மானேஜர் மதன்லாலே கருத்துக் கூறியதன் அடிப்படையில்தான் நீங்கள் நீக்கப்பட்டதாகப் பேச்சு இருந்தது.

**கும்ப்ளே** : அது வெறும் கட்டுக் கதை. எல்லா ஆட்டக்காரர்களுக்குமே ஏதாவது ஒரு கட்டத்தில் சறுக்கல் வரும். நான் ஒன்றும் விதிவிலக்கல்ல. இலங்கையில் நான் விக்கெட் ஏதும் எடுக்கவில்லை என்பது உண்மைதான். ஆனால் இப்போது மிக நன்றாகப் பந்து வீசுவதாகத்தான் கருதுகிறேன். சொல்லப் போனால் இப்போதுதான் என் பந்து வீச்சு முன்பை விட மிக மிகச் சிறப்பாக இருக்கிறது என்று நினைக்கிறேன். சமீபத்திய ரஞ்சிப் போட்டியில் கட்டாந்தரைப் பிட்சில் ஆறு விக்கெட்டுகளை வீழ்த்தியதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

**கல்கி** : உங்கள் பந்து வீச்சு ரகசியத்தை வீடியோவில் பார்த்துப் பார்த்து, பிற அணியினர்

பழகி விட்டதால்தான் கலபமாக விளாசி விடு கிறார்கள் என்று சொல்கிறார்களே?

**கும்ப்ளே :** வீடியோவில் பந்து வீச்சை கவனித்து 'ஸ்டடி' செய்வதென்பது எல்லோருமே – நாம் உட்பட செய்வதுதான். இது ஒரு குற்றச் சாட்டா? கண்ணுக்கு நேரே பந்து வீசும் போது அதில் ரகசியம் ஏது? ஆனால் ஒவ்வொரு 'போலரும்' ஒரு ஸ்டாக் பந்து வைத்திருப்பார்கள். பிரத்தியேகமான பாணம் என்று சொல்லலாம். வாக்கார் யூனுஸுக்கு யார்க்கர், ஷேன் வார்னேவுக்கு கூக்லி என்று இருப்பது எல்லோரும் அறிந்ததே. என் ஸ்பெஷலிடி – என் பந்து வீச்சில் கொஞ்சம் வேகம் கலந்திருப்பது.

**கல்கி :** நீங்கள் ஒரு லெக் ஸ்பின்னரே அல்ல; வேகப் பந்து தான் வீசுகிறீர்கள் என்று ஒரு கருத்து நிலவுகிறது. கடந்த வருடம் சென்னையில் நடந்த மேட்சில் 'கும்ப்ளே, ஒரு பந்தாவது லெக் ஸ்பின்னாகப் போடு' என்று ரசிகர்கள் கூவியது கேட்டிருக்கலாம்....

**கும்ப்ளே** *(கோபமாக)* : என் பதில் இது தான். அடிப்படையில் நான் ஒரு டாப் ஸ்பின்னர். (Top Spinner) ஷேன் வார்னே, முஷ்டாக் அகமது போல லெக் ஸ்பின்னர் அல்ல! வார்னே மாதிரி என்னால் பந்தை இடப்புறத்திலிருந்து வலப்புறமாகத் திருப்ப முடியாது. ஆனால் கூக்லி போடுவேன். என் பந்தை 'ஸ்லோ' என்று கணித்து பேட்ஸ்மேன் ஆடினால் அது வேகமாக வந்து அவுட் ஆக்கிவிடும்! இதுதான் என் ஸ்டைல்; டெக்னிக். ஒரு பந்து வீச்சாளனுக்கு விக்கெட் எடுப்பதுதான் குறிக்கோளே தவிர, எப்படி வீசுகிறோம் என்பதல்ல! ஆனால் சமீப காலமாக நான் லெக்ஸ்பின்னும் கற்றுக் கொண்டு விட்டேன். உங்கள் தமிழ்நாட்டுக்காரர் வி.வி. குமார்தான் என் கோச். வரும் ஆட்டங்களில் என் லெக் ஸ்பின்னையும் நீங்கள் பார்க்கலாம்!




**கல்கி :** அணியில் இடம் பெற்று விட்டீர்கள். மறுபடி உதவி கேப்டன் பதவி கிடைக்குமா?

**கும்ப்ளே :** அது தெரியாது. அது பற்றிக் கவலையும் இல்லை. சிறப்பாக ஆடி, பழையபடி ஒவ்வொரு இன்னிங்ஸிலும் நிறைய விக்கெட் எடுக்க வேண்டும் என்பதுதான் ஒரே லட்சியம்!

**கல்கி :** கடைசியாக ஒரு பர்ஸனல் கேள்வி. மேனகா என்ற பெண் உங்களுக்கும் அவருக்கும் காதல் என்றும் விரைவில் திருமணம் என்றும் குமுதம் பத்திரிகையில் பேட்டி கொடுத்திருந்தார். எப்போது திருமணம்?

**கும்ப்ளே :** உங்கள் மூலம் எல்லா தமிழ்ப் பத்திரிகை வாசகர்களுக்கும் இந்த விஷயத்தைத் தெளிவுபடுத்தி விடுகிறேன். ஏன், அந்தப் பெண்ணுக்கும் கூட! என் அண்ணன் தினேஷுக்கு முதலில் திருமணமாக வேண்டும். வீட்டில் எனக்குள்ள பொறுப்புகளை முதலில் நிறைவேற்றியாக வேண்டும். பிறகுதான் திருமணம். மேலும், **என்னைப் பல பெண்கள் காதலிக்கிறார்கள். ஆனால் நான் யாரையும் காதலிக்கவில்லை.** இதை போல்டு லெட்டரில் போடுங்கள்! அந்தப் பெண் மேனகா வேறு இனத்தைச் சேர்ந்தவர். எங்களது 'மடி'யான குடும்பம் அவரை ஏற்காது. குடும்பத்தை மீறி நான் எக்காரியமும் செய்வதாக இல்லை! ◉

பேட்டி, படங்கள் : **நந்தினி**





• தேசிய பூங்காவாக அறிவிக்க வேண்டும்...

# காலையில் ஒரு தீர்ப்பு; மாலையில் ஒரு தீர்ப்பு!

இருபத்தைந்துக்கு மேற்பட்ட பறவை வகைகளும், அரிய உயிரினங்களும் வந்து தங்கி, வாழ்ந்து வரும் இடம், சென்னை அடையாறு முகத்துவாரம். நகர மையத்தில். இப்படி ஓர் இடம் அமைவது அபூர்வம். இப்படிப்பட்ட இடத்துக்கு ஐம்பதே மீட்டர் தள்ளி, பலமாடிக் கட்டடம் ஒன்று எழ ஆரம்பித்தபோது, அதை எதிர்த்துக் குரல் எழுப்பப்பட்டிருக்கிறது.

இது சம்பந்தமாக, சென்னை உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட வழக்கில், அண்மையில் காலையில் ஒரு தீர்ப்பும், மாலை அதை ரத்து செய்து இன்னொரு தீர்ப்பும் அளிக்கப்பட்ட அதிசயம் நடந்தது!

கன்ஸ்யூமர் ஆக்ஷன் குரூப் தலைவர் பரத் ஜெயராஜ் சொன்னார்:

கோஸ்டல் ரெகுலேஷன் ஸோன் 1991 அறிக்கையின்படி, முகத்துவாரத்தை அடுத்த இடங்களில் இம்மாதிரி கட்டடங்கள் கட்டக் கூடாது. வன விலங்குகள் பாதுகாப்புச் சட்டம் 1972ன்படி, இந்தப் பகுதி பாதுகாக்கப்பட்ட இடம். கோஸ்டல் ரெகுலேஷன் ஸோன் பகுதிகளில், ஹை டைடு லைனிலிருந்து (HTL) 500 மீட்டருக்குள் எந்தக் கட்டடமும் கட்டக் கூடாது என்று சட்டம் சொல்லுகிறது.

வெட் லேண்ட் எனப்படும் இம் மாதிரி நீர்ப்பகுதிகளில் வளரும் செடி கொடிகள், நிலத்தடி நீர் அதிகரிக்க உதவுகின்றன. சுற்றியுள்ள நீர் நிலைகளில் நச்சுக் கழிவுகளால் பாதிப்பு ஏற்படாதபடி பாதுகாக்கின்றன. கட்டடம் கட்டினால், அந்தப் பயன்கள் எதுவும் கிடைக்காது போகும்.

எஸ். குகன், என். ராம், பேராசிரியர் குரியன் போன்ற நகரின் முக்கியப் பிரமுகர்கள் 4000 பேர் கையெழுத்திட்ட மனுவை அரசுக்குக் கொடுத்த பிறகும் கூட, அந்த இடத்தை ஒரு பறவைகள் சரணாலயமாகவோ, தேசியப் பூங்காவாகவோ மாற்றியமைக்க அரசு முன்வரவில்லை. சென்னை இயற்கை வளச் சங்கம், சென்னை சுற்றுச்சூழல் பாதுகாப்பு அமைப்பு, உலக வனவிலங்குகள் நிதியகம் எல்லாம் சேர்ந்து, இந்த இடத்தைப் பாதுகாக்க ஓங்கிக் குரல் எழுப்பின. பயன் ஏதும் இருக்கவில்லை.

இரண்டு பொதுநல வழக்குகளை, சென்னை உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்தது கன்ஸ்யூமர் ஆக்ஷன் குரூப். ஒன்று, இந்தப் பகுதியை பறவைகள் சரணாலயம் அல்லது தேசியப் பூங்கா என்று அறிவிக்க வேண்டும். இரண்டு, கட்டடம் கட்டுவதற்கு அளிக்கப்பட்ட அனுமதி மறுக்கப்பட்டு, அதை இடித்துத் தள்ள ஆணை பிறப்பிக்க வேண்டும்.

ஆனால் சென்ற மாதம் இந்த வழக்கை, தனிநபர் ஜட்ஜ் சுப்பிரமணி விசாரித்துத் தள்ளுபடி செய்து விட்டார். எனவே இரண்டாவது முறையாக ரிட் தாக்கல் செய்யப்பட்டது.

சென்ற வாரம் 17-ஆம் தேதி, சென்னை உயர்நீதி மன்ற தலைமை நீதிபதி லிபரானும், நீதிபதி ராஜுவும், வெறும் பப்ளிஸிடியை நோக்கமாகக் கொண்டு தாக்கல் செய்யப்பட்ட வழக்கு என, காலையில் தள்ளுபடி செய்தார்கள். பிற்பகல் மூன்றரை மணிக்கு, மறுபடி இதே வழக்கை எடுத்துக் கொண்டு, அடையாறு முகத்துவாரப் பகுதி பாதுகாக்கப்பட வேண்டிய இடமா அல்லவா என்பதை முடிவு செய்து தெரிவிக்க மத்திய - மாநில அரசுகளுக்கு ஆறு மாத கால அவகாசம் கொடுத்திருக்கிறது!

உலக வனவிலங்குகள் நிதியகம் (World Wildlife Fund) இந்த இடத்தைப் பாதுகாக்கப்பட்ட இடமாகவே பட்டியலிட்டிருக்கிறது. இது சம்பந்தமான தமிழ்நாடு அரசின் ஆணை செக்ஷன் 37-ன் படியும் இது ஈர நிலம்தான்.

— சாருகேசி



• வே. செந்தில்குமார்: வெற்றி பெற்றவர்

'ஜோ'க் எழுதுங்கள்; ஜோராக ஒரு திருமணத்தை நடத்தி வையுங்கள்' என்கிற தலைப்பில் கல்கியும் பாலு ஜுவல்லர்ஸும் இணைந்து நடத்திய போட்டி நினைவிருக்கிறதல்லவா! அதில் வே. செந்தில்குமார் வெற்றி பெற்றிருந்ததையும் ஏற்கெனவே அறிவித்திருந்தோம்.

# ரூ.50,000க்குத் தங்க நகைகள் பரிசு பெறும் பிரேமா!

தமது தந்தையார் பாலசுப்ரமணியன் நினைவாக, பாலு ஜுவல்லர்ஸ் அதிபர் பாலு ஐயப்பன் வழங்குகிற ரூ.50,000 மதிப்புள்ள தங்க நகைகளை எந்த ஏழைக் குடும்பத்தில் நடக்கவிருக்கும் திருமணத்துக்குத் தரப் போகிறார், வெற்றியாளர் வே. செந்தில்குமார்? நம் அனைவரையும் குடைந்து கொண்டிருந்த இந்தக் கேள்விக்கு விடை தந்து விட்டார் அவர்.

நகைகளைப் பெறப் போகும் அந்த ஏழைக் குடும்பத் தலைவரின் பெயர்: கே.டி. சின்னுசாமி. இவருடைய மூன்றாவது மகளான செல்வி சி. பிரேமா (வயது 21)வின் திருமணத்துக்குத் தான் அந்த நகைகளைப் பெற்றுக் கொள்ளப் போகிறார்.

இவரைத் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம்?

"தனியார் பஸ் ஒன்றில் கண்டக்டராகப் பணியாற்றிக் கொண்டிருக்கும் சின்னுசாமியின் சம்பளம் மிகக் குறைவு. ஏற்கெனவே இரண்டு மகள்களைத் திருமணம் செய்து கொடுத்து விட்டார். இப்போது திருமணத்துக்குத் தயாராய் மூன்றாவது மகள். தமது குறைந்த வருமானத்திலும் கடைக் குட்டியான மகனைக் கல்லூரியில் படிக்க வைத்துக் கொண்டிருக்கிறார். இந்த நிலையில் தமது மூன்றாவது மகளின் திருமணம் என்பது அவரது சக்திக்கு மீறிய ஒரு செயலாகவே இருக்கிறது. இதன் காரணமாகத் தான் பாலு ஜுவல்லர்ஸ் அதிபர் பாலு ஐயப்பன் வழங்குகிற ரூ. 50,000 மதிப்புள்ள தங்க நகைகளை குஞ்சாண்டியூரைச் (மேட்டூர் அருகில்) சேர்ந்த இந்தக் குடும்பத்துக்குத் தருகிறேன்!'' என்கிறார் வே. செந்தில் குமார்.



• கே.டி. சின்னுசாமி: நகைகளைப் பெறப் போகும் குடும்பத் தலைவர்



• பரிசு பெறவிருக்கும் செல்வி பிரேமா

கல்கியும் பாலு ஜுவல்லர்ஸும் இணைந்து நடத்துகிற விழா, சிறப்பான விழாவாகத் தானே இருக்க முடியும்!

அதனால், 16.12.97 செவ்வாய்க் கிழமை சென்னையிலுள்ள ஏவி.எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் மாலை 6 மணிக்கு கோலாகலமாக விழா நடைபெறவிருக்கிறது.

விழாவின் சிறப்பு அம்சமாக சாலமன் பாப்பையா தலைமையில் பட்டி மன்றம். தலைப்பு: இன்றைய சூழலில் எது சிறந்தது? காதல் கல்யாணமா? பெற்றோர் பார்த்து நடத்தும் கல்யாணமா?

**கல்கி வாசகர்கள், பொது மக்கள் அனைவரையும் விழாவில் கலந்து கொண்டு மகிழ அழைக்கிறோம்.**

– ஆசிரியர்

பத்திரிகைகள் என்றாலே அமைதியாகி விடுகிற ஆனந்தி, அன்று தமது மௌனத்தைக் கலைத்தார். பெயரில்தான் ஆனந்தம் இருக்கிறது. ஈ.பி.ஆர். எல்.எஃப். தலைவர் பத்மநாபாவைத் திருமணம் செய்தால் இப்படி வாழ்வே துயரம் சூழும் என்று அவர் அறிந்திருக்கவில்லை. அவரையறியாமலே பேச ஆரம்பித்தார். நாங்கள் அமைதியாக கேட்டுக் கொண்டிருந்தோம். பேச்சு முடிந்த போது பாரத்தை இறக்கி வைத்த நிம்மதி அவருக்கு. வீடே மௌனமானது.

"நான் பி.எஸ்ஸி., முடித்த சமயம் பத்மநாபா எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டிற்குக் குடிவந்திருந்தார். அவர் ஒரு இயக்கத்துக்கு லீடர்ன்னல்லாம் தெரியாது. இருபத்தோரு வயசில எனக்கு என்ன அரசியல் தெரியும்? ஒரு சந்தர்ப்பத்தில பேச சந்தர்ப்பம் அமைஞ்சது. அந்தச் சந்தர்ப்பம்..." – கண்களில் நீர் திரள்கிறது.



• கணவருடன்...

"எனக்கு அரசியல் சம்பந்தமா எதுவும் தெரியாது சார். அவர் ரொம்ப சாஃப்டா பேசுவாரு. என்னமோ தெரியலை. அவர் மேலே காதல்வசப்பட்டேன். வீட்டுக்கு விஷயம் தெரிஞ்சப்போ... அது வேணாம். எப்படியாவது அவரோட சேர்ந்து வாழ்ந்திடணும்னு மட்டுந்தான் தோணிச்சு. எல்லா எதிர்ப்பையும் மீறித்தான் போனேன். அவரப் பத்தி அப்ப பேப்பரில எல்லாம் வந்திச்சு. அது பத்தி முழு விவரம் தெரியாமலே சந்தோஷப்பட்டேன். உங்களுக்குள்ள எப்படி காதல்ன்னு கேட்கிறப்பெல்லாம் பதில் சொல்லத் தெரியலை. காதல் Full of my heartன்னு சொல்லலாமா?

"கல்யாணத்திற்கு, உள்ளூர்க்காரங்களா யிருந்தும் எங்க குடும்பத்திலிருந்து யாருமே வரலை. ஆனா அவர் குடும்பமே கொழும்பி

# "கோயிலுக்குப்

லிருந்து வந்தது. அப்பத்தான் தெரியும் அவர் கொஞ்சம் வசதியான வீட்டுப் பிள்ளைன்னு. அவரோட வாழ்ந்த அந்த ஒரு வருஷம்..." – வார்த்தைகள் துண்டு துண்டாகத் தெறிக்கின்றன. உதடுகள் துடிக்க, பேச்சு தடைப்பட்டது.

"வீட்டில சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் சண்டை போட்டேன். அவரு கேட்டிட்டு சிரிச்சுக்கிட்டே போயிடுவாரு. நான் சொல்றபடியெல்லாம் கேட்கிறதா ஒரு அற்ப சந்தோஷம். கையில காசிருந்தா நண்பர்களுக்கு இல்லைன்னு சொல்லாம தந்திடுவாரு....

"கொலை நடந்த முதல்நாள் தான் எங்க அப்பாவுக்கு அறுபதாம் கல்யாணம். அப்பத்தான் அப்பா, அம்மாகூட ஒண்ணு சேர்ந்தோம். ரொம்ப சந்தோஷமான நாள். திருப்பதிக்குப் போனோம். திரும்புறப்போ அப்பாவும் அம்மாவும் ட்ரெயின்ல வந்துட்டாங்க. நான், என் அக்கா, அக்கா குழந்தை எல்லாரும் நேரா அப்பார்ட்மெண்ட்டுக்கு வந்திட்டோம். மறுநாள் அப்பாவோட லக்கேஜெல்லாம் வீட்டில கொடுத்திட்டு வரலாமான்னு கிளம்பு னோம். அவரு அப் பார்ட்மெண்டில்

நின்று டாட்டா காட்டுனது... அதுதான் கடைசி..." - பெருக்கெடுக்கும் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே பேசினார்.

"ஒரு மணி நேரத்தில் திரும்பிட்டேன். நான் மட்டுந்தான் போறேன். பதினாலு உடல் கந்தல் கந்தலாக் கிடக்குது. என்னைப் பக்கத்தில் கூட போக விடலை சார். ஒரு மணி நேரம் கழிச்சு நான் கௌம்பியிருக்கக் கூடாதா... பதினாலோடு நானும் போயிருப்பேன். அக்கா, அக்கா குழந்தை எல்லாரும்... எது எங்கள தப்பிக்க வச்சது? உள்ளுக்குள்ள நரம்புகளெல்லாம் அதிர்றது மாதிரி இருந்திச்சு... அப்புறம் ஹாஸ்பிட்டலுக்கு தூக்கிட்டுப் போயிட்டாங்க. அவருகூட ஒரு பதினாலு வயசுப் பையன் பிரியமா இருப்பான். அவங்கிட்ட, சயனைடு இருந்தா



# போனாத்தான் ரிலீஃப் கிடைக்குது..."

யாருக்கும் தெரியாம கொண்டு வந்து கொடுன்னேன். அவன் என் கையப் பிடிச்சு குமுறிக் குமுறி அழுதான். செத்துப் போயிடாதீங்கன்னான். அவன் அப்படி அழாம இருந்திருந்தா அன்னைக்கே செத்துப் போயிருப்பேன்.

"எல்.டி.டி.ஈ., ஈ.பி.ஆர்.எல்.எஃப்.க்குள்ள பெரிய முரண்பாடு இருக்குன்னு அப்புறந்தான் எனக்குத் தெரியும். அவர் படுகொலைக்கு யார் யாரோ பின்னால இருந்ததா பேப்பர்ல வருது. அதப்பத்தியெல்லாம் சொல்ல எனக்குத் தெம்பு இல்லீங்க. ஆனா இதே மாதிரி படுகொலை, அவங்க வீட்டில நடந்தா சும்மா இருப்பாங்களா...?

"பத்து வருஷம் கழிச்சு அப்பா பி.எட்., படிக்கச் சொல்லி கம்பல் பண்ணுனாரு. அவரே அப்ளிகேஷன் வாங்கி... எங்கெங்கோ ஓடி சீட் வாங்குனாரு. புத்தகத்தப் படிக்க விரிச்சா எழுத்துத் தெரியலை. எல்லாம் பிளாங்கா இருக்கு. அப்போ ஒரு பத்தாங் கிளாஸ் படிக்கிற பெண்ணோட அறிவு கூட எனக்கில்லைன்னு தோணிச்சு. பல்லக் கடிச்சுக்கிட்டுப் படிச்சா... அவரோட நின்னு பேசுனது, செல்லமா சண்டை போட்டதுதான் வருது. படிக்க முடியாம கதறிக் கதறி அழுதேன். எங்கப்பா விடலை. என்னை ஒரு குழந்தையா அரவணைச்சுத் தேற்றினார்.



"பி.எட். முடிச்சு வேலைக்குப் போகவே பயம். ஒவ்வொரு ஸ்கூல் ஏறும் போதும் கால் நடுங்கும். எங்க போனாலும் பத்மநாபா மனைவியான்னு கேட்டதும் இல்லைன்னுடுவாங்க. ஏதாவது சிக்கல் வந்திடும்னு மறுத்திட்டாங்க. ஈவினிங் ஸ்டார் மெட்ரிகுலேசன் நிர்வாகம் மட்டும் என்ன நெனைச்சதோ, என்னைச் சேத்துக்கிட்டாங்க. அவங்க தான் முதல் மனநிம்மதியைத் தந்தவங்க. இப்போ... தமிழ்நாடு அரசு இடைக்காலப் பணி நிமித்தமா ஒரு ஸ்கூலில் வேலை போட்டுத் தந்திருக்காங்க...

"அப்பா உசிரோட இருக்கிறவரைக்கும் ஒதுங்கியிருக்க ஒரு நிழல் இருக்கு. பத்மநாபா எனக்குன்னு எதையும் கொடுத்திட்டுப் போகலை. அவரு குடும்பத்தாரோட கடிதப் போக்குவரத்துக் கூட கிடையாது. ஒருவேளை என்னைக் கல்யாணம் பண்ணுன

துனால தான் தங்கள் மகனைப் பறிகொடுத்தோம்னு அவங்க நினைக்கலாம். எங்க சொந்தக் காரங்க, எங்க சொல்படி கேட்டிருந்தா இவனுக்கு இப்படி ஆயிருக் காதுன்னு சொல்லுவாங்க. நான் கேட்டுட்டு அமைதியா இருக்கேன். இவனை வளர்க்கிறது என் கடமை இல்லீங்களா. அதுக்காக நான் வாழ்ந்துதானே தீரவேண்டும்...'' என்று ஆறு வயது பையனைக் காட்டினார்.

"அவர் இறந்த பின்னாடி சாமி மேலயே வெறுப்பு வந்திடுச்சு. கடவுள் இறந்து விட் டார்னு அஞ்சு வருஷமா இருந்தேன். எனக்குள்ளேயே பல தத்தளிப்பு. எனக்கு நானே என் வருத்தங்களைப் பேசிக்கணும் போல இருந்திச்சு. கடவுள் இருக்காரா இல்லை யாங்கிறத விட்டுட்டு, அவருகிட்டயே நான் மறுபடி போறேன். அப்பா கிட்ட சொல்ல முடியாத விஷயத்த நான் யாருகிட்ட சொல்ல முடியும்? கோயிலுக்குப் போனா கொஞ்சம் ரிலீஃபா இருக்கு...'' ஆனந்தி கண்களை மூடிச் சாய்ந்து கொண்டார். கேள்விகள் கேட் கவே நமக்குத் தோன்ற வில்லை.

வெளியே வந்தபோது தெருவாசிகள் சுற்றிக் கொண் டார்கள். ஆனந்தி என்ற பெயர் பக்கத்தில் உள்ள தெருவாசிகளுக்கும் தெரிந் திருக்கிறது. "சார் பத்மநாபா கொலைல இறந்தவங்க குடும்பத்துக்குத் தலா இரண்டு லட்சம் கொடுக்கணும்னு கோர்ட் சொல்லியிருக்கு. கொடுத்திடுவாங்களா?'' என்றனர். "எங்களுக்குத் தெரி யாது'' என்றோம். "இன்னா சார் ஆனந்தி மாதிரியான குடும்பங்களுக்குத் தர்றதில தாமதிக்கவே கூடாது சார். ரெண்டு லட்சம்கிறது அவங்களுடைய இழப்புக்கு ஈடாகாது சார். இன்னும் அரசு எவ்வளவோ பண்ணலாம் சார்!'' அதிகாரம் கையில் இல்லை என்பது அவர்களுக்கும் தெரிந்தது தானே!

சந்திப்பு :

**சு. வேணுகோபால்**

**மும்பை மசாலா**

# 30 சதம் வரி, 100 சதம் வலி?

வி.டி.ஐ.எஸ் திட்டத்தின் கீழ், இரண்டு மும்பைக்காரர்கள் கிட்டத்தட்ட 5-10 கோடி ரூபாய் வரை சமர்ப்பித்த கையுடன் நிம்மதிக்குப் பதிலாக அவர்களுக்குத் தலைவலி தொடங்கி விட்டது! அண்டர்வார்ல்ட் 'டான்'களிடமிருந்து "எங்கள் பங்கு எங்கே?'' என ஃபோனில் மிரட் டல்கள். ரகசியமாக இருக்க வேண்டிய தகவல்கள் 'லீக்'காவது பற்றிப் புகார்கள் பறந்தன. சீஃப் இன்கம் டாக்ஸ் கமிஷனர் முத்துராமலிங்கமோ 'அண்டர் வர்ல்ட்காரர்களுக்குத் தகவல் சேகரிக்க எத்தனையோ உத்திகளிருக்கும்; எங்கள் மண்டையை ஏன் வீணாக உருட்டுகிறீர்கள்?' என்கிறார்? இவர்கள் இலக்கான 4,500 கோடிகளில், 50 சதத்தை மும்பையிலிருந்து எதிர்பார்க் கிறார்கள். இதுவரை 900 கோடிகள்தான் இங்கிருந்து கிடைத்திருக்கிறது! இந்நிலையில் இப்படி ஒரு புரளி இருந்தால், எந்த மாங்காய் மடையன், வரிகட்ட வரிந்து கொண்டு வருவான்?

சிவப்பு விளக்குப் பகுதிகளில் விருப்பத்திற்கு மாறாக கடத்தப்படுபவர்களையும், 'மைனர்' பெண்களையும், தகவல் கிடைத்தவுடன், சமூக சேவகர்களின் உதவியுடன் சென்று, திடீர் விசிட் செய்து விடுவிப்பது, பழைய முனிசிபல் கமிஷனர் கைர்நாருக்கு வழக்கம்தான். பரிசாக ஒன்றி ரண்டு தர்ம அடிகளையும் விடுதி நடத்தும் அலிகளின் தாராசப் பேச்சையும் வாங்கிக் கட்டிக் கொள்வார். இம்முறை வித்தியாசமான அனுபவம் அவருக்கு! பாண்டுப் பகுதியில் விடுதி நடத்தும் நான்கு அலிகள், தாமாகவே, தம்மிடமுள்ள 25 பெண்களை ஒப்படைப் பதாகவும், 'இனி இப்படிச் செய்ய மாட்டோம்' என திருப்பதி பாலாஜியின் படத்திற்கு முன்பாக சத்தியமே செய்வதாகவும் வாக்குறுதியளிக்க, விழுந் தடித்துக் கொண்டு ஓடி னார் கைர்நார். சத்தியப் பிரமாணமெல்லாம் பிர மாதமாக இருந்தாலும், நான்கு பெண்கள் மட்டுமே விடுவிக்கப் பட்டனர்.



• கைர்நார்

மும்பையிலிருந்து :

**- ஜெயஸ்ரீ ராஜ்**











# GOKULAM

**English/Tamil magazines for children of all ages**





## TWO MAGAZINES THAT QUENCH EVERY CHILD'S THIRST FOR FUN, EXCITEMENT AND KNOWLEDGE





47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097

**"என்.வி.என். சோமு அவர்கள் விபத்தில் இறப்பதற்கு முந்தைய செவ்வாய் இரவு எங்கள் ஹோட்டலில் டின்னருக்கு வந்திருந்தார். அவரது குடும்பம் தலைவனை இழந்து தவிக்கிறது. கலைஞர் அன்புத் தம்பியை இழந்து விட்டார். நாங்கள் ஒரு நல்ல வாடிக்கையாளரை இழந்து விட்டோம்!" என்று கூறுகிறார், சென்னை எழும்பூர் உடுப்பி ஹோம் மத்ஸ்யா உணவு விடுதியின் பங்குதாரர் ராம் நாராயண் பட்...**



# சோமுவுக்குப் பிடித்த பழப்பச்சடி

"எங்கள் ஹோட்டல் துவங்கி கிட்டத்தட்ட 60 வருடங்கள் ஆகிறது. இத்தனை வருடங்களில் சமூகத்தில் பெரிய மனிதர்கள், ஆளும்கட்சி, எதிர்க் கட்சி என்று சர்வ கட்சிப் பிரமுகர்கள் பலர் எங்கள் வாடிக்கையாளர்களாக இருந்திருக்கிறார்கள். அவர்களிடம் நாங்களோ, எங்கள் பணியாளர்களோ நெருக்கமாகப் பேச்சு வைத்துக் கொள்வதில்லை. ஆனால் மறைந்த சோமு அவர்கள் கொஞ்சம் வித்தியாசமானவர். பொறுப்பில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் சரி; எந்த பந்தாவும் இருக்காது. கிட்டத்தட்ட 30 வருடங்களாக அவர் எங்கள் வாடிக்கையாளர். ஹோட்டலை நிறுவிய எங்கள் பெரியப்பா ஷாமா பட்டை நன்கு அறிந்தவர்.

'உங்க பெரியப்பாவின் உபசரிக்கும் பண்பு பிரமாதம்' என்று என்னிடம் அவர் சொன்னதுண்டு. நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது 'என்ன, பாடமெல்லாம் எப்படியிருக்கு?' என்று என் படிப்பைப் பற்றியும் விசாரிப்பார்.

எங்கள் ஹோட்டலில் அவருக்குப் பிடித்தது பழப் பச்சடி. வாழைப் பழ துண்டுகள், காய்ந்த திராட்சை ஆகியவற்றுடன் தயிர் சேர்த்து செய்யப்படுவதுதான் பழப்பச்சடி. தேர்தல் பிரசார சமயத்தில் தொண்டர்களுடன் வந்தால், 'முதலில் எல்லோருக்கும் பழப்பச்சடி கொடுங்க' என்று சொல்லுவார். சில சமயங்களில் அவருடன் பிசா கணேசனும் வருவதுண்டு. பணியாளர்களுடன் மிக இயல்பாகப் பழகுவார். எங்கள் ஹோட்டல் வாசலில் பல வருடங்களாக இருக்கும் டாக்ஸி ஓட்டுனர் மாணிக்கத்துடனும் பேசுவார், நலம் விசாரிப்பார்.

மத்தியில் பாதுகாப்புத் துறை இணை அமைச்சரான பிறகு சுமார் இரண்டு வார காலம் எங்கள் ஹோட்டல் பக்கம் அவர் வரவில்லை. 'சரி; அமைச்சர் ஆகிவிட்டார். இனிமேல் வரமாட்டார்' என்று நாங்கள் நினைத்திருந்தோம். திடீரென்று அவரிடமிருந்து போன். 'இரண்டு மேஜை ரிசர்வ் செய்து வையுங்கள்' என்று முதலில் சொல்லி, பின்னர் குடும்பத்துடன் வந்து விட்டார். 'அமைச்சரான புதுசு. கொஞ்சம் பிஸியா இருந்துட்டேன்!' என்று பின்னர் எங்களிடம் சொன்னார். அது போல எங்களிடம் சொல்ல வேண்டிய அவசியமேயில்லையே! அத்தனை எளிமை.

எங்கள் பணியாளர் ஒருவரின் வீடு எரிந்து போய்விட்டது. லோக்கல் எம்எல்ஏ, தாசில்தார் ஆபீஸ் என்று முட்டி மோதிப் பார்த்தும் நிவாரணம் ஏதும் கிடைக்கவில்லை. இந்த விவரத்தைத் தயங்கித் தயங்கி, சோமு அவர்களிடம் சொன்னார் அவர். 'ஹவுசிங் போர்டு வீடு கேட்டு மனு போடுங்க... நான் சிபாரிசு செய்கிறேன்' என்றார். காத்திருந்து, அந்த பணியாளரிடம் மனுவை வாங்கிப் போனார்.

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**

குண்டு வெடிப்புக்கு
யார் காரணம்னு
கண்டு பிடிச்சுடுவேன்.....

ஸ்டுடியோ
வாசலில்
குண்டு
வெடிப்பு

மோகன்பாபு



1997 நவம்பர் 30
ஈசுவர கார்த்திகை 15
மலர் : 56
இதழ் : 18

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# சோனியா வந்தாலும் ஜெயிக்க முடியாது!

ஆதரவு வாபஸ் மிரட்டல் என்பது காங்கிரஸின் உபதொழிலாகி விட்டது! இம்முறை தனது நிலையில் உறுதியாயிருக்கிறது காங்கிரஸ். தி.மு.கவை வெளியேற்றாவிட்டால் ஐக்கிய முன்னணி அரசு கவிழும்.

ஐக்கிய முன்னணியும் தனது நிலையில் உறுதியாயிருக்கிறது. தி.மு.கவை வெளியேற்ற முடியாது என்கிறது. ஆனால் தனது முடிவை எழுத்து மூலம் காங்கிரஸ் தலைவருக்குத் தெரிவிப்பதை ஒத்திப் போட்டிருக்கிறது.

பிரதமர், தேவையான அவகாசம் எடுத்துக் கொள்ளட்டும் எனக் காத்திருக்கிறது காங்கிரஸ்!

ஜெயின் கமிஷன் இடைக்கால அறிக்கையின் ஒரு சில பகுதிகள் மட்டும் வெளியான நிலையிலேயே மிரட்டலை ஆரம்பித்துவிட்டது காங்கிரஸ். அந்த அறிக்கை முழுவதும் நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட பிறகு, விவாதங்கள் ஏதுமின்றியே தனது முடிவை மீண்டும் உறுதிப்படுத்தி விட்டது!

ஜெயின் கமிஷன் இடைக்கால அறிக்கை என்பது தீர்ப்பு அல்ல. அதன் அடிப்படையில் தி.மு.கவைத் தீண்டத்தகாத கட்சியாக்குவது எனில் இன்று அரசியலில் நீடிக்க அனேகமாக




எந்தக் கட்சிக்கும் தார்மீக உரிமை இருக்காது.

மத்திய அரசின் புலிகள் ஆதரவுக் கொள்கை மாறிய பிறகும் கருணாநிதி தொடர்ந்து அவ்வமைப்பை ஆதரித்தார்; அதனால் தி.மு.கவுக்கும் ராஜீவ் கொலையுடன் தொடர்பு உண்டு என்று கூறுவது சௌகரியமான அரசியல் வாதம்!

ஜெயின் கமிஷன் இடைக்கால அறிக்கை, வலுவான ஆதாரங்களுடன் கூடிய முக்கிய தகவல்களைத் தராமல், வார்த்தை விளையாட்டுகளால் வளர்த்தப்பட்டிருக்கிறது. 'தமிழ்நாட்டு மக்களுக்கும் புலிகளுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது' என்பது போன்ற பொறுப்பற்ற பழி சுமத்தல்கள் அடங்கியுள்ள அறிக்கையின் மதிப்பே கேள்விக்குரியதாகும்.

இத்தகைய ஜெயின் கமிஷன் அறிக்கையைத்தான் எல்லா கட்சிகளுமே தங்கள் அரசியல் ஆதாயத்துக்காகப் பயன்படுத்த முயற்சி செய்கின்றன!

சோனியா காந்தியின் சீற்றத்துக்குப் பயந்து தி.மு.கவுக்கு எதிராகத் திரும்பியுள்ளபோதிலும், காங்கிரஸ் தேர்தலைச் சந்திக்கும் நிலையில் இல்லை. தேர்தல் என்று வந்தால், தி.மு.க எதிர்ப்பு என்கிற துருப்புச் சீட்டைப் பயன்படுத்தி ஜெயிக்கலாம் என்கிற காங்கிரஸின் எண்ணம் பொய்த்துப் போகும். விடுதலைப் புலிகள் வளரவும் பலம் பெறவும் தி.மு.கவைவிட காங்கிரஸ் கூடுதலாக உதவியிருக்கிறது என்பதை இன்றைய சூழலில் நிரூபிப்பதும் மக்களுக்கு எடுத்துச் சொல்வதும் மிகச் சுலபம். சோனியாவே தலைமை ஏற்றாலும் இனி காங்கிரஸிடம் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படாது. ஐக்கிய முன்னணியிடமும் வாக்காளர்களுக்குப் பெருத்த ஏமாற்றம்.

எனவே, பொதுத் தேர்தல் அறிவிக்கப்பட்டால், பயனடையப் போவது பி.ஜே.பி.தான். ஆனால், பி.ஜே.பியும் மக்கள் தீர்ப்பைக் கோராமல் தனக்கு ஆட்சி அமைக்க மறுவாய்ப்புத் தரப்பட வேண்டும் என்று கோரியிருக்கிறது!




அத்தனை கட்சிகளுமே குறுக்கு வழியில் ஆட்சியைப் பிடிக்கவோ தக்க வைத்துக் கொள்ளவோ முயற்சி செய்கின்றனவேயொழிய, நாட்டின் எதிர்காலம் குறித்த அக்கறை அவற்றிடம் இல்லை.

ஹிந்து நாளிதழுக்கு, காவல் துறை முன்னாள் உயரதிகாரி வி.ஆர். லக்ஷ்மி நாராயணன் எழுதியிருக்கும் கடிதத்தில் குறிப்பிடுகிறார்:

'நடந்து முடிந்ததை எண்ணி மார்பில் அடித்துக் கொண்டு கதறுவதைக் காட்டிலும் எதிர்காலத்துக்கு எது நல்லது என்று யோசித்துச் செயல்பட வேண்டும். ராஜீவ் காந்தி உயிரோடிருந்திருந்தால் இதைத்தான் சொல்லியிருப்பார்...'

அரசியல் ஊசலாட்டங்களினால் தலைவர்களையும் கட்சிகளையும்விட அதிக பாதிப்புக்கு உள்ளாகியிருக்கிறது பொருளாதாரம்.

ஐக்கிய முன்னணியின் கொள்கை, காங்கிரஸ் அறிமுகப்படுத்திய புதிய பொருளாதாரக் கொள்கையின் தொடர்ச்சிதான் என்ற போதிலும் ஆட்சி தொடங்கிய நாள் முதலாக 'நித்ய கண்டம் பூர்ணாயுசு' என்று அவதிப்படுவதால், தொழிலதிபர்களும் வர்த்தகர்களும் தங்கள் பணிகளை முழுமூச்சுடன் மேற்கொள்ள இன்னும் முன்வரவில்லை.

இப்போது அரசியல் சூழல் மேலும் பலவீனமடைய, பொருளாதாரத்திலும் அதன் எதிரொலி! ரூபாயின் மதிப்பு முன்னெப்போதைக்காட்டிலும் தாழ்ந்திருக்கிறது. ஒரு அமெரிக்க டாலரின் மதிப்பு 37.80 ரூபாயை எட்டியிருக்கிறது!

இந்தச் சீரழிவு தொடராமல் நாட்டைக் காப்பாற்ற வேண்டுமானால் குறுக்கு வழி அரசியல் கைவிடப் பட வேண்டும். நேர்மையான முறையில் மக்களிடம் தீர்ப்புக் கோர அனைத்துக் கட்சிகளும் தயாராக வேண்டும். மக்களும் ஆணித்தரமான தீர்ப்பு வழங்கி ஸ்திரமான அரசு அமைய வழி வகுக்க வேண்டும். ●

# த.மா.கா. மேயர் Vs

**திருச்சியில் மேயருக்கும், துணை மேயருக்கும் இடையே அடிக்கடி மோதல்கள் வெடிப்பதும், அது பத்திரிகைகளில் செய்தியாவதும் வாடிக்கையாகி விட்டது. இருவருமே பெண்கள். இருவருமே தமிழ் மாநில காங்கிரஸை சேர்ந்தவர்கள். இருந்த போதிலும் அடிக்கடி பிரச்னைகள்...! மூப்பனாரே சமரசம் செய்தும் பூசல் நின்றபாடில்லை...**

**என்னதான் பிரச்னை? அவர்களிடமே கேட்டோம்.**

**திருமதி எமிலி ரிச்சர்ட்: (துணைமேயர்):** அமெரிக்காவில் குடியுரிமை பெற்று செட்டில் ஆன யாரும் இந்தியாவிற்குத் திரும்பி வர மாட்டார்கள். ஆனால் நான் மக்களுக்குச் சேவை பண்ண வேண்டும் என்பதற்காகவே 30 வருட அமெரிக்க வாழ்க்கையை முடித்துக்

## துடிப்பாகச் செயல்படுவது தப்பா?

கொண்டு ஊர் திரும்பியுள்ளேன். எனக்குப் போதுமான அளவு பண வசதியிருக்கிறது. அரசியல், பதவி மூலமாக சம்பாதிக்க வேண்டிய அவசியம் எனக்கில்லை. எனவே, நேர்மையாக, துடிப்பாகச் செயல்படுகிறேன். இது பல அதிகாரிகளுக்கும், கவுன்சிலர்களுக்கும் பிடிக்கலை. மேயரிடம் ஏதாவது சொல்லி புகார் பண்றாங்க. அவங்க என்னைக் கூப்பிட்டு, செயல்பட வேண்டாம்னு சொல்றாங்க. நான் மீறிச் செயல்படுகிறேன்.

ரோடு போடுற இடங்கள், குடிநீர், குழாய் இணைப்பு வழங்கப்படும் இடங்கள்-இவற்றிற்கெல்லாம் நான் 'விசிட்' செய்து மேற்பார்வை செய்கிறேன். இதனால் ஆங்காங்கே ஊழல் தடைப்படுகிறது. அந்தக் கோபமெல்லாம் மேயர் மூலம் என்னை நோக்கி வீசப்படுகிறது.

மேயர் வயதானவர். வார்டுகளுக்கு விசிட் செய்ய முடியாதோ, என்னமோ... 'விசிட்' போவதேயில்லை. அதனால் துணை மேயர் என்ற முறையில் நான் ஆர்வமாய் விசிட் போகிறேன். குறைகளைக் களைகிறேன். இது நிறையப் பேருக்குப் பொறுக்கலை.

மக்கள் மேயரிடம் போவதில்லை. என்னிடம் தான் புகார்களோடு வருகிறார்கள். காரணம்-நான் உடனுக்குடன் புகார்களை கவனிக்கிறேன். இதனால் நான் மேயரை டம்மியாக்குவதாகக் குறை கூறுகிறார்கள். நான் எதையும் திட்டமிட்டெல்லாம் செய்யவில்லை. மக்களாகவே 'இவரிடம் போனால் வேலை முடியும்' என்று முடிவு செய்து கொண்டு,மேயரிடம் போகாமல் என்னிடம் வருகிறார்கள். அதற்கு நான் என்ன செய்ய முடியும்? பத்திரிகையாளர்களும் எதுவானாலும் என்னைத் தேடித் தான் வருகிறார்கள்.

மற்றபடி ஒரு சில பத்திரிகைகளில் வந்த மாதிரி நான் 'பவரு'க்காக அலையவில்லை. எனக்குத் தேவை அதிகாரம் இல்லை; செயல்பாடுகள் தான். மாநகராட்சி என்பது குடிநீர், குப்பை, சாக்கடை... விளக்கு சம்பந்தப்பட்டது.



* துணை மேயர்

இதிலெல்லாம் கால தாமதம் செய்யக் கூடாது. உடனுக்குடன் வேலை நடக்க வேண்டும். மேயர் 'அவசரப்படாதே' என்கிறார். என்னால் அப்படி இருக்க முடியவில்லை. தடாலடியாகச் செயல் படுகிறேன் என்கிறார்கள். அநியாயத்திற்காகத் தடாலடி செய்யவில்லையே! நியாயத்திற்குத் தானே தடாலடி செய்கிறேன். இதிலென்ன தவறு?

என் மீது குறை கூறுபவர்கள், பொறாமைப் படுபவர்கள், அதையெல்லாம் விட்டுவிட்டு என் மாதிரி நேர்மையாய் உழைக்க முன் வரட்டும். அதை விடுத்து என்னையும் செயல்பட விடாமல் பண்ணிவிட நினைக்கிறதைத்தான் தப்பு என்கிறேன்.

நான் பணத்துக்காகவோ, அதிகாரத்துக் காகவோ தவறாகச் செயல்பட்டால் என்னை எதிர்க்கலாம்; கண்டிக்கலாம். நேர்மையாகவும், துடிப்பாகவும் செயல்படுவதற்குப் போய் எதிர்க்கிறார்களே... அதுதான் விநோதம்!

**மேயர் திருமதி புனித வல்லி பழனியாண்டி:** எங்களுக்குள் பெரிதாக எந்தப் பிரச்னையு மில்லை. எமிலி படபட வென பேசக்கூடியவர். பத்திரிகையாளர்களிடமும் அப்படியே ஏதாவது பேட்டி கொடுத்து விடுகிறார். அவரை நான் செயல்பட அனுமதிப்பதில்லை என்கிறார். அப்படியெல்லாம் நான் எந்தத் தடையும் விதிக்க வில்லை. ஆனால் போகிற இடங்களிலும் கவுன் சிலர்கள், அதிகாரிகளை அதிகம் பேசி விடு கிறார். அவர்கள் 'இவர் ஏன் வருகிறார்? இவ ருக்கு என்ன அதிகாரம்?' என்று என்னிடம் முறையிடுகிறார்கள். அந்த விஷயத்தில்தான் நான் எமிலியை ஒருமுறை கண்டித்தேன்.

அவர் அமெரிக்காவில் வாழ்ந்தவர். அதனால்தான் இங்குள்ள நடைமுறை நிர்வாகச் சிக்கல்கள் அவருக்குப் புரிவதில்லை. எந்தப் பணியானாலும் நினைத்தவுடனே முடித்து விட வேண்டும் என்று விரும்புகிறார். இங்குள்ள சட்டதிட்டங்களை மதித்துத்தானே நாம் செயல்பட முடியும்? அந்த மாதிரி நேரங்களில் கவுன்சிலர், அதிகாரி, மேயர்.. என்று பார்க் காமல் பேசி விடுவார். சிலர் அவரது குணமே அப்படித்தான் என்று விட்டு விடுவார்கள். ஆனால் எல்லோருமே அப்படித் திட்டுவதை ஈஸியாக எடுத்துக் கொள்ள மாட்டார்களே... அதுதான் பிரச்னை!

சந்திப்பு, படங்கள்:
**கிரண் நியூஸ்**

## எல்லோரையும் சகட்டு மேனிக்குப் பேசலாமா?



• மேயர்

பழைய துணிகளைப் போட்டு விட்டு எவர்சில்வர் பாத்திரங்களை வாங்குவதில் பெண்களுக்குள்ள அதீத ஆர்வத்தை வைத்து, இன்னும் ஜோக் எழுதிக் கொண்டுதான் இருக்கிறார்கள். நசுங்கிய அலுமினியம் மற்றும் பித்தளைப் பாத்திரங்களை எடைக்குப் போட்டு விட்டு, புதிய பாத்திரங்களைப் பெறும் வியாபாரமும் தொன்மையான ஒன்றுதான்.

சமீபகாலமாக இது போன்ற 'எக்ஸ்சேஞ்ச் ஆஃபர்கள்' நினைத்துக்கூட பாத்திராத பரிணாமங்களில் பெருகி வருகின்றன. "எந்த பிராண்ட் டி.வி. உங்களிடம் இருந்தாலும் அதைக் கொடுத்துவிட்டு எங்களது புத்தம் புதிய டி.வி. செட்டை எடுத்துச் செல்லுங்கள்!" ('கொஞ்சம் அதிகப்படி'த் தொகையை கொடுத்துவிட்டு தான்) என்கிறது விளம்பரம். குக்கர், கியாஸ் ஸ்டவ் என்றெல்லாம் தொடங்கி கூலிங் கிளாஸ், பேண்ட் வரை வந்து நிற்கின்றன,

# பழசைக் கொடுத்து புதுசு வாங்கினால்...

இந்தப் பண்டமாற்று வியாபாரம்.

இது எப்படி சாத்தியம்? வியாபாரம் பெருக வேண்டும் என்பதற்காக இப்படியொரு அதிரடி முறையைப் பயன்படுத்துகிறார்களா? நம் பழைய பொருள்களை அவர்கள் என்ன செய்வார்கள்? விசாரித்தோம்.

"யாருமே தன் பொருளை நஷ்டத்திற்கு விற்க மாட்டார்கள் என்பதை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும். எல்லாமே மார்ஜின் செய்யும் விளையாட்டு!" என்றார் வசந்த குமார். வசந்த் அண்ட் கோ உரிமையாளர்.

அது என்ன மார்ஜின்? ஒரு பொருளின் அடக்க விலைக்கும் விற்பனை விலைக்கும் இடையிலான வித்தியாசம்தான் அது.



ஒரு பொருளின் அடக்கவிலை ஐந்தாயிரம் ரூபாய் என்று வைத்துக் கொள்வோம். தயாரிப்பாளர்கள் இதன் உச்சக்கட்ட விலையை ஏழாயிரம் ரூபாய் (MRP) என்று லேபிளில் குறித்து விடுவார்கள். போட்டியின் காரணமாகவும் வாடிக்கையாளரின் பேரம் பேசும் திறமை காரணமாகவும் இதை ஆறாயிரம் ரூபாய்க்கு விற்பார்கள். பழையதைக் கொடுத்து புதியதைப் பெற்றுக் கொள்ளும் முறையில், ஏழாயிரம் ரூபாயிலிருந்து (நீங்கள் தரும் பழைய பொருளுக்காகவென்று) 1500 ரூபாய் குறைத்து, 5500 ரூபாய்க்கு விற்பார்கள. பழைய பொருளுக்கு 1500 ரூபாய் கணக்கிடப்பட்டுவிட்டதாக நீங்கள் நினைக்க, உண்மையில் அந்த வியாபாரி உங்கள் பழைய பொருளுக்கான விலை எதையுமே தரவில்லை. அவரது லாபமான இரண்டாயிரம் ரூபாயில் 1500 ரூபாயைக் குறைத்து, வெறும் 500 ரூபாய் லாபத்தில் விற்றார்; அவ்வளவுதான்.

"எந்தப் பொருளை வாங்குவதானாலும் நாலு கடைகளில் தரத்தையும் விலையையும் விசாரித்துவிட்டு வாங்குவதுதான் நல்லது. ஆனால் இப்போதுதான் அதுகூட முடியாத அளவுக்கு நேரமின்மையும், அதெல்லாம் எதற்கு என்று கேட்ட விலையைக் கொடுக்கிற அளவுக்

குப் பணப் புழக்கமும் மக்களிடம் அதிகமாகி விட்டதே!" என்கிறார் வசந்த குமார்.

**ந**ம்மிடமிருந்து இப்படி பெறப்படும் பழைய பொருள்களின் கதி என்ன? ஏதாவது பெரும் கிடங்கில் இந்தப் பழைய டி.வி., ஃப்பிரிட்ஜ் போன்றவற்றைக் குவித்து வைத்து பிறகு குப்பையில் சேர்த்து விடுகிறார்களா?

நாம் பல இடங்களில் விசாரித்ததில் இது போன்ற பொருள்களை வாங்கிக் கொள்வதற்கென்றே கிராமங்களிலும் சிறு டவுன்களிலும் பெரும் டிமாண்ட் இருக்கிறது என்பது தெரிய வந்தது. உதாரணமாக பழைய ஃப்பிரிட்ஜ்களை கிராமங்களிலும் டவுன்களிலும் உள்ள ஓட்டல்கள் மற்றும் மருந்தகங்களில், ஆயிரம் இரண்டாயிரம் என்று கொடுத்து வாங்கிப் போடத் தயாராக இருக்கிறார்கள்.

"இப்போது இது போன்ற திட்டங்களில் அதிகம் விற்பனையாவது டி.வியும், குளிர்பதனப் பெட்டியும்தான். காரணம் இந்தியாவில் ஐம்பது வருடங்களுக்கு முன்பே ஃப்பிரிட்ஜ் புழக்கத்துக்கு வந்து விட்டது. தொலைக்காட்சி அறிமுகமாகி இருபது வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. எனவே இவை பழையதாகி விட்டிருக்க வாய்ப்பு உண்டு. தவிர, இத்தனை வருடங்களில் அவற்றின் தொழில் நுட்பத்தில் பலவித முன்னேற்றங்களும் நிகழ்ந்திருக்கின்றனவே!" என்கிறார்கள் டீலர்கள்.

டி.வியையே எடுத்துக் கொள்ளுங்கள். தொடக்கத்தில் ஒரே சானல்தான். தினமும் சுமார் இரண்டரை மணி நேரங்கள்தான் ஓடும். இப்போது அப்படியா? எத்தனையோ சானல்கள். இருபத்தி நான்கு மணி நேரமும் ஒளிபரப்பு. டி.வி. செட்டின் ஆயுள் சீக்கிரம் முடிந்து விட வாய்ப்பு உண்டு என்பதோடு, புதிய தொழில்நுட்ப வசதி கொண்ட செட்டை வாங்க வேண்டும் என்ற ஆர்வமும் மக்களிடம் பெருகிவிட்டது. இதன் காரணமாகவே நம் நாட்டில ஒவ்வொரு வருடமும் 25 லட்சம் டி.வி செட்களும் 20 லட்சம் ஃப்பிரிட்ஜ்களும் விற்றுத் தீர்கின்றனவாம்.

"எக்ஸ் சேஞ்ச்

ஆஃபர் என்பது மக்களுக்கு நன்மை பயக்கக்கூடிய ஒன்றுதான். வாஷிங் மிஷின் இங்கு பரவலாக அறிமுகமாகி குறைந்த காலமே ஆவதால், இந்த வகை திட்டம் வாஷிங் மிஷினைப் பொறுத்தவரை எடுபடுவது கஷ்டம். வாங்கி மிகச் சில வருடங்களே ஆன ஒரு பொருளை விற்பதில் ஒரு தயக்கமிருக்கும்" என்கிறார் விவேக் அண்ட் கோ உரிமையாளர் கோதண்டராமன்.

• வசந்த்

• கோதண்டராமன்

இந்தத் திட்டத்திற்காகப் புது தயாரிப்பின் உச்ச விலையை நிறுவனங்கள் அதிகப்படுத்தி விடுகின்றன என்பதை இவர் மறுக்கிறார். "அந்த விலைக்கல்லவா அவர்கள் எக்ஸைஸ் வரி கட்ட வேண்டியிருக்கும். கூட விற்பனை வரி வேறு. அதனால் விலையை யாரும் அதிகப்படுத்துவதில்லை" என்கிறார்.

"பண்டமாற்று முறையில் வந்து சேரும் பழைய சாமான்களைப் புதுப்பித்து, புதிய பொருளாகவே மார்க்கெட்டில் விற்று விடுவார்களோ என்று சிலருக்கு எழும் பயம் அநாவசியமானது!" என்றும் சொல்கிறார். "ஒரு புது டி.வி. தயாரிப்பதைவிட இப்படி புதுப்பிக்க அதிகப் பணம் தேவைப்படும். ஐம்பது வயது நபரை இருபத்தைந்து வயதுக்காரராகக் காட்ட முயற்சி செய்வது சுலபமா?" என்கிறார்.

**வ**ந்து சேரும் ஒவ்வொரு பழைய பொருளையும் சோதித்து அதன் வேலைத் திறனுக்கு ஏற்பத்தான் மதிப்புப் போடுகிறார்கள். ஆனால் சில தயாரிப்பு நிறுவனங்கள் மட்டும் இப்படி ஒவ்வொரு ஐட்டத்திற்கும் ஏற்ப மதிப்பீடு செய்வதில்லை. உதாரணத்திற்கு சுமீத். பழைய மிக்ஸி எதுவாக இருந்தாலும் குறிப்பிட்ட தொகையை டிஸ்கவுண்டாக புது செட்டின் விலையிலிருந்து குறைத்துக் கொள்கிறார்கள்.

தங்களிடம் வந்து சேரும் பழைய பொருள்களை டீலர்கள், தயாரிப்பு நிறுவனங்களுக்கு அனுப்புவதில்லை. இதற்கென்றே சில ஏஜெண்டுகள் உண்டு. அவர்கள் மூலம் இவை உடனுக்குடன் விற்கப்படுகின்றன.

குஜராத்துதான் இது போன்ற செகண்ட் ஹாண்ட் பொருள்களை வாங்குவதில் முன்னணியில் இருக்கிறதாம். மகாராஷ்டிரத்தில் உள்ள ஜலகான் என்ற நகரிலும் இந்த வியாபாரம் வெகு ஜரூராக நடைபெறுகிறது.

— ஜி.எஸ்.எஸ்.

# பித்ர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92




இத்துடன்
கிராண்ட் ஸ்வீட்ஸ்
வாங்கி
நல்லோர்களுக்கு
விநியோகம் செய்யவும்.

*திருமண வைபவங்களுக்கு:*

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது
மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை - 20
போன்: 4915662
4914213

## கதை – 1

# உள்ளொளி

அறையில் நுழைந்ததுமே பளிரென அவர் தென்பட்டார். இவனைப் பார்த்ததும் இணக்கமாகச் சிரித்தார்.

சோமு அண்ணன் இவனை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

“தம்பி சர்வே ஆபீஸ்ல இருக்கு. எழுதிட்டு வருது. நீங்க வர்றீங்கனு ஆபீசுக்கு லீவு போட்டுட்டு நேரா இங்கியே வந்துடுச்சு...” வேறு வேலையாக அண்ணன் புறப்பட்டார்.

“ஒக்காருங்க. என்ன பேருல எழுதறீங்க..?”

இவன் அவர் தொடர் எழுதி வரும் பத்திரிகையில் போன மாதம் வந்த கதையைச் சொன்னான். பார்த்திருக்க வேண்டும்.

அவர் தலையை அசைத்தார்.

“சிகரெட்?”

அவர் நீட்டவும் இவன் உணர்ச்சியின் சிகரத்திற்கே போனான். எப்பேர்ப்பட்ட மனிதன். தன்னையும் சரிசமமாய்.

இவன் பிடிப்பவன் தான்... இருப்பினும் இப்போது வேண்டாமென்பதை ஒரு மரியாதையாகக் கருதினான்.

“சொல்லுங்க...” என்றார்.

“சார் ஒங்க ரைட்டிங்ன்னா...” இவன் சுதாரித்துக் கொண்டு துவக்கவும் அவர் அமர்த்தினார்...

“புதுசா... புதுசா எதாச்சும் பேசுவோம். பெரிய எழுத்தாளன், சின்ன எழுத்தாளன்னு எதுவுமே இடையாது. என்னைப் பொறுத்த மட்டும் எழுத்தாளன்தான் எல்லாரும். அவங்கவங்க அனுபவத்தோட கற்பனை, நடையை வச்சுக் குடுத்தா ஜனங்க வாங்கிப் படிக்கறாங்க. இப்ப என்ன எழுதறீங்க?”

“உள்ளொளின்னு ஒரு சப்ஜெக்ட். அடுத்தவங்க செய்கையால இர்ரிடேட் ஆகற ஒருத்தன் வழி தேடறான். வித வித அனுபவங்கள், தானே தன்னிலிருந்து பிரிஞ்சு தன்னையே மூணாம் மனுஷனாப் பாக்கறான். இவன் பக்கமும் தப்புன்னு நிறைய இருக்கு..”

பதினைந்து நிமிடங்கள் இவன் கொட்டுகிறான். அவர் கண்ணை மூடிக் கேட்கையில் இரண்டு சிகரெட்டுகள் சுத்தமாகத் தீர்கின்றன...

முடித்து விட்டு அவர் வாயைப் பார்க்கிறான்.

“தம்பி... நிறைய படிக்கணும். எதுவுமில்லாத புதுமையா எழுதணும்.. ரெண்டாவது, இது அவசரமான சாட்டிலைட் யுகம். ஒருத்தருக்கும் அட்வைஸ் பண்ற கதையே புடிக்காது.. நீ இளைஞன். இந்த வயசுக்குன்னு தே ஆர் ஸம் சார்ம்ஸ்... அதில ஒரு ரவுண்ட் வா. இந்த சப்ஜெக்ட்லாம் அவுட் டேடட். பொல்யூஷன், விமன் லிபரேஷன்னு எழுதலாம். நா சொல்றேன்னு வருத்தப்படாதே!” தோளில் தட்டுகிறார்.

அவரை இவனது கதையால் ஈர்க்க முடியாதது இவனுள் வருத்தம் எழுந்தது. அவருக்குத் தெரியாததா...

கூட்டம் முடிந்தது. அன்றிரவு இவன் மறுக்க மறுக்க- சோமு அண்ணனும் அவரும் அன்பால் வற்புறுத்தியதன் பேரில் அவர்களுடன் விருந்துண்டு, புகை பிடித்து அவர் ரயிலேறும் வரை கூடவே இருந்தது சொப்பனமாக இருந்தது. நிறையப் பேசினார். எப்பேர்ப்பட்ட பாக்கியம் இது...

அவருடைய உயர்விற்கும், புகழுக்கும் அவரது பேதமற்ற குணம்



தான் காரணம் என்பது இன்று இவன் கண்ட உண்மை. அவரது வார்த்தைகள் காதை விட்டு அகலுவதாக இல்லை. ஒன்றுமே தெரியாமல், தான் பேனாவை எடுத்தது அரை வேக்காட்டுத்தனம்தான். அவரது வார்த்தைகள் எழுத்துக்கு எழுத்து சத்தியம். அது மட்டுமே காலத்திற்கும் நிற்கும்.

அடுத்த வாரம் கடைகளில் வால் போஸ்டர்கள் தொங்கின. அவர் எழுதும் வித்தியாசமான புதுத் தொடர் “உள்ளொளி” துவங்கப் போவதால் அனைவரும் பிரதிக்கு முந்தவும்... அவர் போஸ்டரில் கள்ளமின்றிச் சிரித்துக் கொண்டிருந்தார். ●

சுப்ரமணியன் ரவிச்சந்திரன்



பல்லாயிரக்கணக்கான விசிறிகளை வருத்தப்பட வைத்திருக்கிறார் கால்பந்தாட்ட வீரர் மாரடோனா.

''என் குடும்பத்துக்காக நான் இந்த முடிவை எடுத்திருக்கிறேன். என் இரண்டு மகள்களிடமும் எனக்குள்ள அன்பின் காரணமாகவும், பாசத்தைப் பொழியும் என் பெற்றோருக்குச் சில கடமைகளை நான் நிறைவேற்ற வேண்டியிருப்பதாலும் இந்த முடிவை எடுத்திருக்கிறேன்'' என்று அறிவித்து கால்பந்து போட்டிகளில் இருந்து ஓய்வு பெற்று விட்டார். முன்பு செய்தது போல மறுபடி ஆட

# மறுபடியும் வரமாட்டார் மாரடோனா!

வரும் உத்தேசம் இல்லையென தீர்மானமாகக் கூறியுள்ளார். பீலேவுக்கு அடுத்து சர்வதேச கால்பந்து வி.ஐ.பி.யாக கருதப்பட்டவர் மாரடோனா.

கிளாடியா என்ற தமது தீவிர ரசிகையுடன் காதல் கொள்ளத் தொடங்கினார். பதினான்கு வருடங்கள் இந்தக் காதல் நெருக்கம் தொடர்ந்தது. டால்மா, ஜெனினா என்று இரண்டு பெண் குழந்தைகள் பிறந்தனர். திடீரென்று ஒரு நாள் "அம்மா, உன்னுடைய கல்யாண ஆல்பத்தைக் காட்டு" என்று நச்சரித்தவுடன், மற்றவர்களுக்காக இல்லாவிட்டாலும் தன் பெண்களுக்காகவாவது கிளாடியாவுடன் தனக்குள்ள உறவை சட்டபூர்வமானதாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று முடிவெடுத்தார். 7.11.89 அன்று நடைபெற்ற இவர்களது திருமணம் படு ஆடம்பரமாக இருந்தது. ஆயிரத்துக்கும் மேற்பட்ட வி.ஐ.பி. விருந்தாளிகளை தனி ஜெட் விமானத்தின் மூலமாக திருமணக் கூடத்திற்கு அழைத்து வந்தார். ரோமன் கத்தோலிக்க முறைப்படி நடைபெற்ற இந்தத் திருமணத்திற்கு ரிசப்ஷன் ஒரு பிரம்மாண்டமான குத்துச் சண்டை அரங்கத்தில்' பதினைந்து அடி உயரம் கொண்ட கேக்கை தம்பதிகள் வெட்ட (ஏணியின் மீது ஏறித்தான்) கைத்தட்டல் விண்ணைப் பிளந்தது!

15 அடி உயர கேக்கை வெட்டும்போது....

அர்ஜன்டினாவைச் சேர்ந்த மாரடோனா பிறந்தவுடனேயே, அவரது அம்மாவிடம் "கவலையே பட வேண்டாம். உங்கள் மகனின் உடல் பூராவும் உறுதியான தசைகள்" என்றாராம், பிரசவம் பார்த்தப் பெண்மணி. பின்னாளில் தான் ஆடும் ஒவ்வொரு நிமிடத்துக்கும் பல நூறு பவுண்டுகள் என்று சம்பாதித்தாலும், மாரடோனா மிகவும் ஏழையாக வளர்ந்தார். அப்பா தொழிற்சாலை ஒன்றில் கூலி வேலை செய்தவர். எட்டு குழந்தைகள் இவரைச் சேர்த்து! இந்த நிலையில் மாரடோனா ஒன்றும் விரும்பத்தக்க சூழலில் வளரவில்லை.

குட்டை கட்டையான உருவம் கொண்ட இவரை (அவரது இன்றைய உயரமே ஐந்து அடி ஐந்து அங்குலம்தான்) சிறு வயதில் மற்றவர்கள் "சின்ன வெங்காயம்" என்று குறிப்பிடுவார்கள்.

திறமைசாலி என்றாலும் அடிக்கடி பல வித சிக்கல்களில் இவர் சிக்கிக் கொள்வதுண்டு. ஒருமுறை தொலைக்காட்சிக்காக இவரை பேட்டி காண வந்த நிருபரை "நீதானே என்னைப் பற்றித் தவறாக ஒரு கட்டுரையில் எழுதினாய்?" என்று கத்திவிட, அதுவும் அதைத் தொடர்ந்து அவர் வீசிய திட்டு வார்த்தைகளும் அப்படியே 'லைவ்' ஆக ஒளிபரப்பாகி விட்டது! 1986ல் ஜெர்மனியும் அர்ஜன்டினாவும் உலகக் கோப்பை இறுதிப் பந்தயத்தில் சமமான கோல்கள் போட்டு டென்ஷனுடன் இருக்க, மாரடோனாவின் அற்புத கோல்தான் அர்ஜன்டினாவுக்குக் கோப்பையைப் பெற்றுத் தந்தது.

நிறைய திமிர் பிடித்தவர், கூட்டு முயற்சியில் நம்பிக்கை இல்லாதவர், தப்பாட்டம் ஆடுவது பற்றிக் கவலைப்படாதவர் என்றெல்லாம் இவரைப் பற்றிய விமர்சனங்கள் எழுந்ததுண்டு. போதை மருந்து அருந்தியதாக எழுந்த குற்றச்சாட்டு மிகப் பிரபலம்.

"மாரடோனா, நாங்கள் உங்கள் பக்கம். விளையாட்டிலிருந்து ஓய்வு பெறாதீர்கள்" என்று ஆயிரக்கணக்கில் தந்திகளை அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள் அவரது விசிறிகள். ●

— ஜி.எஸ்.எஸ்

# சம்பந்தம்

**சுப்ரமணியன் ரவிச்சந்திரன்**

மேலாகப் பார்வையிட்டான். சுவரே பொத்துப் போகும் அளவிற்குப் படங்கள். குணசீலம் பெருமாளின் படமும் கூட இருந்தது...

"அவளுக்கு சாமின்னா அப்படி ஒரு பித்து... தபோவனம் ஸ்வாமிகள்ட்ட கொழந்தையா இருக்கறச்சே அழச்சிண்டு போனோம். அந்த வாசனை... அவர் ஆசீர்வாதம் பண்ணவ."

பெண்ணின் தகப்பனார், ரிடையர்டு வாத்தியார், சீனுவின் பார்வையை உத்தேசித்து விளக்கினார்.

"ராமுவும் கொஞ்சம் கோயில் குளம்னு போவான்..."

அவர் கையை மேல் நோக்கிக் காட்டினார்.

பெண் காப்பி கொடுத்தாள். நல்ல கலவை. தம்ளரின் விளிம்பில் சின்ன கரிப்புள்ளி. குமுட்டி விசிறிய போது பறந்து வந்திருக்கலாம். சமையலறையைக் கடந்த போது குமுட்டியைப் பார்த்திருந்தான்.

ராமு காபி சாப்பிட மாட்டான். டீதான். இதை இப்போதே சொல்லலாமா அல்லது அவனே சொல்லிக் கொள்ளட்டுமா...

"இந்த காலத்துல இப்பிடி கெடைக்கறது அதிசயம்தான் ஸார். வேலை பாக்கப் போற பொண்ணு- டிகிரி கூட வேண்டாம்னு சொல்லியிருக்கார். எம் பொண்ணுக்கு இப்பக் கூட எதாவது வேலை பண்ணி வைக்க முடியும்... நிறைய ஸ்டூடண்ட்ஸ் எம் பேச்சைக் கேக்க இருக்கா..."

ராமுவுக்கு ஒன்றிலும் பற்றில்லைதான். பௌடர் போட மாட்டான். சட்டைத் துணி கூட பார்த்து வாங்க மாட்டான். அவனைப் பொறுத்த மட்டும் வேலை பார்க்கும், படித்த பெண் என்றில்லை. கல்யாணமே தேவையில்லைதான். சீனுவுக்கு இது ஒரு அனுபவம்.

"நாளை மறுநாள் ராமுவோட அக்கா வரா மெட்ராஸ்லேந்து... அவா வர்ற அன்னிக்கு மொத நாள் நான் ஒங்களுக்குத் தகவல் சொல்றேன். நீங்க தயாராகலாம்..."

சீனு எழுந்து கொண்டான்...

"ஒங்களப் பாத்தாலே அமரிக்கையா இருக்கு. ஒங்க ஃப்ரெண்ட், வேற மாதிரியா இருக்கப் போறார். எனக்கு ஒங்கள மாதிரி மனுஷா கெடைக்கறதே பெரிசுதான்."

அவர் மேற்கொண்டு பேசுவதற்குள் இவன் கிளம்பினான். பெண்டிரும் வாசல் வரை வந்து மலர்ச்சியுடன் வழியனுப்பினர்.

'பெண் குத்து விளக்கு. வசதி சுமார் தான். ரொம்பவும் எதிர் பார்க்க வேண்டாம். மனிதர்கள் பாந்தமாக இருக்கிறார்கள். உன் மனதிற்கும், சுபாவத்திற்கும் இது பொருந்தும். வாழ்த்துக்கள்.'

சீனுவின் கடிதம் அன்றிரவு திருச்சியிலிருந்து கடலூருக்குப் பறந்தது...

"சீனு... ஃபோன்.." ஹாலின் மறு கோடியிலிருந்து அழைப்பு வர சீனு எழுந்து போனான். ராமு.

"மாப்ள, தபால் பாத்தேன். தேங்க்யூ. அக்காவோட நாளைக்கு வர்றோம். நோ... நோ... நானும் அக்காவும்தான். ரெண்டு பிஸ்கட், டீ போதும். சுச்சா முச்சான்னு ஆயில் ஐட்டம் வேண்டாம். இன்னிக்கு லோகல்ல ரெண்டு எடம் போறோம். நான்தான் அவ வர்றச்சே ஒரேயடியா எல்லா எடத்தையும் பாத்துடலாம்னு. அங்க முடிச்சுண்டு அடுத்த நாள் மதுரைல ஒரு எடம் பாக்கலாம்னு மொதல்ல ப்ரோக்ராம். நீ சொன்னப்புறம் திருச்சியைத் தாண்டி வேலையிருக்காது. ஸ்ரீராம் எப்படியிருக்கான்?"

"வாங்கோ வாங்கோ" அவர் ஏறக்குறைய ஓடி வந்தார்...

"போன் பண்ணான் சார். நாளைக்கு நீங்க தயாரா இருங்கோ. ஒண்ணும் பண்ண வேணாம்... செலவுக்காகச் சொல்லலை. அவனுக்கு ஒத்துக்காது.."

"எங்களுக்கும் டெலிக்ராம் வந்தது சார். மோஸ்ட் வெல்கம்னு ஒரு டெலிக்ராம் குடுத்திருக்கேன். ஏதோ டோக்கனா மினிமமா செய்யறது செய்யத்தானே வேணும்...நீங்கதான் ஒரு அண்ணனா நின்னு முடிச்சு வைக்கணும்..." என்ற போது சீனுவுக்கு நெகிழ்ந்தது.

"வரேன் சார்!"

"காட் ப்ளஸ் யூ."

மெடிக்கல் கடைப் பையன் அழைத்தான் "சார் போன்!"

"நாந்தான் மாப்ள. நேத்திக்குப் போனமே லோகல்லை, அந்த எடமே செட்டிலாயிடுத்து. இன்கம் டாக்ஸ்ல இருக்கா. அக்கா அதெல்லாம் முடியாது எம்ப்ளாய்டு கேர்ள்தான்னுட்டா. ரொம்பச் சொல்ல முடியலே. நாளைக்கு நல்லது கெட்டதுல்லாம் இருக்கு. நீதான் ரொம்ப சிரமப்பட்டுட்டே. ஒன் வாயால நெகடிவ் ரிசல்ட்டைச் சொன்னா அவா அப்செட் ஆயிடுவா. நானே டைரக்டா டெலிக்ராம் குடுத்துட்டேன் அலையன்ஸ் செட்டில்டுன்னு. அப்புறமா நானே ட்ரிச்சி வர்றேன்..."

"கங்க்ராட்ஸ் ராமு..."

சீனுவுக்கு அந்தப் பெண்ணின் முகம் நினைவில் வந்தது.

சீனு ஒரு வாரத்திற்குப் பின் நங்கவரம் பஸ்ஸில் ஏறிய போது பக்கத்தில் அமர்ந்தவரைப் பார்த்துச் சிரித்தான்.

அவர் எதையும் பிரதிபலிக்கவில்லை. இரண்டு முறை ஏதோ சொல்ல அவர் உதடு துடித்து அடங்கியது.

"சார். என் ஃப்ரெண்டு..."

"போறும்பா. அதிசயமான ஃப்ரெண்டு. எல்லாமே தகிடுதத்தம். வீட்டை தோட்டம் பாத்துட்டு ஒண்ணும் பண்டம் இல்லேன்னு நீ எழுதினதும், அதைப் புரிஞ்சுண்டு அவன் வராம இருக்க, அங்கியே அலையன்ஸ் செட்டிலாச்சன்னு தந்தி அடிக்கறதும்... அவா நல்லவாதான். சாமி வரம் குடுத்தாலும் பூசாரி... இனிமேலாவது நாலு பேருக்கு நல்லது பண்ணு. ஒரு குடும்பத்து வயத்தெரிச்சலைக் கொட்டிக்காதே... சௌக்கியமா இரு..."

விடுவிடுவென்று இறங்கினவரை ஒன்றும் தோன்றாமல் பார்த்துக் கொண்டிருந்தான். ○





* மருந்துக்கடையில் சில்லறை விற்கும் கண்டக்டர்

**இப்பொழுதெல்லாம் நம் நகரப் பேருந்துகளில் பத்து ரூபாயை நீட்டி டிக்கெட் கேட்கவே பயம். காரணம் சில்லறை! கோவையில் இதன் பின்னணியில் ஒரு திரைமறைவு வியாபாரமே நடக்கிறது என்றால் நம்ப முடிகிறதா..? .... கொஞ்சம் நம் பின்னால் வந்து பாருங்கள்...!**

# சரியான சில்லறை பிஸினஸ்...!

● "ஏன்டா உங்களுக்கு எங்ககிட்ட அடிக்கிற அஞ்சு காசு போதாது..? இப்படி சில்லறை- சில்லறைன்னு இதுலயும் கமிஷன் சம்பாதிச்சு என்னடா சாதிக்கப் போறீங்க..?"

- துடியலூருக்குக் கொஞ்சம் இந்தப் பக்கம் கண்டக்டருக்கும் ஒரு பெரிசுக்கும் ஒரு சிறிய சண்டை... அந்தப் பெரியவரை ஓரங் கட்டினோம்.

"என்னங்க புரியாத மாதிரி கேட்கறீங்க..? நூத்துக்கு அஞ்சு ரூபா சார்.. நானே எம் பொட்டிக் கடையில இவனுககிட்ட கமிஷன் தள்ளி சில்லறை வாங்கியிருக்கேன்..!"

● கோவை சிங்கநல்லூர் - ஒண்டிப்புதூர் ஸ்டாப். அடிக்கடி விசிலூதி வண்டியை நிறுத்தின கண்டக்டருடன் டிரைவர் செம லடாய். சமயம் பார்த்து டிரைவரிடம் கேட்டோம்.

"பின்னே என்னங்க... இவன் சில்லறை சில்லறைன்னு பேயா அலையவே நேரம் சரியாயிருக்கு. ஒரு சிங்கிள் 25 கிலோ மீட்டர். ஒரு மணி நேரம் டைம். ஒரு ஸ்டேஜுக்கு பத்து நிமிஷம் நிப்பாட்டினா எப்படி சார்..? இவங்க தினம் இப்படி 50, 60 சம்பாதிக்க நாங்க பலிகடா (மெமோ) ஆகணுமா..?"

"இதுல உங்களுக்கு ஏதும் கமிஷன்...?"

"கொடுத்தா ஏன் சார் இப்படி சலிச்சுக்கறோம். ஏதோ தங்கமலை ரகசியமாட்டம்ல சில்லறைகளை மூடி மூடி அமுக்கறானுங்க.."

● "ப்பூ.. இதென்ன சார் பிரமாதம்..? கோயில்

உண்டியல் திறக்கறப்பப் போய் பாருங்க. அங்கே சில்லறை படறபாடு– அங்கே 10,000; 20,000 ரூபாய் சில்லறையெல்லாம் ரொம்ப சர்வ சாதாரணம்– போறது போறீங்க மிக ரகசியமாப் போங்க..!"

– குறுக்கில் புகுந்து மெலிதாக ஒரு பெரிய போடு போட்டார், சில்லறை ஏஜண்ட் ஒருவர்.

அவர் சொன்னபடியே புதிதாய் பிஸினஸ் துவக்குவது போன்ற 'பாவ்லா'வுடன் அறநிலையத் துறை உதவியாளர் ஒருவரை அணுகினோம்.

"இப்ப ரொம்பத் தட்டுப்பாடுங்க. கோயில் உண்டியல் திறப்பு லிஸ்ட்டை வச்சுட்டு ஒரே நேரத்துல பலரும் மொய்க்கடறாங்க. அதுவும் காரில் எங்க அதிகாரிகளையும் அழைச்சுட்டு, செலவையும் 'கவனிச்சிட்டு'– அவங்க நடுவுல நீங்க தொழில் செஞ்சா... ரொம்பக் கஷ்டம், வேணும்னா வாங்க.. ஏதோ ஒரு 500, 1000 வாங்கி வைக்கிறேன்..!" என்றார்.

**கோ**யில் உண்டியலில் கிடைக்கும் சில்லறைகள் வங்கிக்குப் போய், அவர்கள் அதை ஜனங்களிடம் புழக்கத்தில் விட படாதபாடு பட்டதெல்லாம் அந்தக் காலம். இப்போது புழக்கத்தில் உள்ள சில்லறைகள் குறைவு. அதனால் உண்டியல் திறக்கு முன்னரே ஏஜண்டுகள் குழுமி விடுகின்றனர். இதில் அறங்காவலர்கள் நியமித்த ஆட்கள், அறநிலையத் துறை ஊழியர்களுக்கு வேண்டப்பட்டவர்கள், இதையே தொழிலாகச் செய்பவர்கள் என நிறைய..

முன்பெல்லாம் பஸ் டெப்போக்களுடன் 'தொடர்பு' வைத்துக் கொண்டு, ஹோட்டல் உரிமையாளர்கள் போன்றோர் கமிஷனுக்குச் சில்லறை வாங்கிப் போவார்கள். இப்போது கண்டக்டர்களே 'சில்லறை வியாபாரத்தில்' சுறுசுறுப்பாக ஈடுபட்டிருப்பதால், இந்த பிஸினஸ்காரர்களெல்லாம் கோயில் உண்டியல் சில்லறையைப் பெரிதும் எதிர்பார்க்கிறார்கள். அதனால் அதற்கு ஏக கிராக்கி!

சில்லறை வியாபாரிகளின் தொழிலை ஊக்குவிப்பதில் முக்கிய பங்கு வகிப்பவை உள்ளூர் பிராந்திக் கடைகளும், பெரிய பெரிய ஹோட்டல்களும் தான். அவற்றுக்குத் தம் வாடிக்கையாளர்களை சில்லறைக்கு அலைய விடாமல் திருப்திப்படுத்த வேண்டும் என்பதே இதன் பின்னணி. ஹோட்டல், ஒயின் ஷாப்புகளுக்கு அடுத்தபடியாக மளிகைக் கடைகளும் சில சில்லறைக் கடைகளும், மருந்துக் கடைகளும் ஏதோ தேவைக்கேற்ப வாங்கிக் கொள்கின்றன.

வாரக் கூலி நாட்களில் கோவையை அடைத்துள்ள, ஒர்க் ஷாப்களிலும், வேஸ்ட் காட்டன் கடைகளிலும் சில்லறைப் பஞ்சம் வரும்போதும் இந்த பிஸினஸ் கதவுகள் அங்கும் திறக்கப்படுகின்றன.

சில்லறைகளுக்குப் பதிலாக காலை டிபன், மதிய உணவு என முன்பு பண்டமாற்றில் ஆரம்பித்த இந்தத் தொழில் ஒரு சதவீதம், இரண்டு சதவீதம் என கமிஷனில் வளர்ச்சியடைந்து இப்போது நூற்றுக்கு 5, 6 ரூபாய் என்கிற அளவில் நிற்கிறது. சில கண்டக்டர்கள் பிராந்திக் கடைகளில் ஒரு 'பெக்'கிற்கு இவ்வளவு சில்லறை என்று கூட ஒரு ரகசிய உடன்படிக்கை வைத்துள்ளதாகவும் நமக்குத் தகவல்.

பின்குறிப்பு:–

கோவை – பொள்ளாச்சி பேருந்தில், பத்து ரூபாய் நீட்டி சில்லறை கேட்ட ஐம்பதுக்கும் மேற்பட்ட பயணிகளுக்கு 8 ரூபாய் போக மீதி 2 ரூபாயைப் பொறுமையாய்க் கொடுத்தார் . அந்த கண்[illegible] ர். டையில் அட்சய



• பஸ்ஸுக்குள்...

பாத்திரமாகப் பொங்கும் சில்லறைகள். எப்படி...? 'வெளிக் கடையில் வாங்கி வந்து சேவை செய்வதாக' தகவல் கிடைத்தது. இக்கட்டுரையைப் படிக்கும் அத்தகைய உத்தம 'அப்பாவி' கண்டக்டர்கள் நம்மைப் பொறுத்துக் கொள்வார்களாக..!

கட்டுரை, படங்கள்:
**கா.சு. வேலாயுதன்**




பிராட் வீட்டை விட்டு வெளியேறி இரண்டு வாரம் ஆகிவிட்டது. முதல் வாரம் பேஜுக்கு மகா கஷ்டமாக இருந்தது. அதற்கு முக்கியக் காரணம் ஆண்டி. அப்பாவை நினைத்துத் தினம் தினம் ராத்திரி அழுது கொண்டிருந்தான். பள்ளிக்கூடத்தில் அவன் அழுகிறானென்று இரண்டு முறை போன் வந்து, இரண்டு முறையும் அங்கே போய் அவனை வீட்டுக்கு அழைத்து வந்தாள். ஒரு முறை அவனைக் காணாமல் பயம் பிடித்துக் கொண்டது – ஒருவேளை மறுபடியும் அவன் எங்காவது ஓடி விட்டானோ என்று. தோட்டத்தில் தன் கரடிப் பொம்மையுடன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்த பிறகே நிம்மதி ஏற்பட்டது.

பேஜினால் என்ன செய்ய முடியும்? ஆண்டிக்கு அப்பா வேண்டும். அதைக் கொடுக்க அவளால் முடியவில்லை.

பிராட் தான் கொடுத்த வார்த்தையைக் காப்பாற்றினான். சனிக்கிழமை வந்து ஆண்டியை வெளியே அழைத்துப் போய்ப் பல இடங்களில் சுற்றிய பின் திரும்ப வீட்டில் கொண்டு வந்து சேர்ப்பித்தான். அப்போது ஆண்டியின் அழுகை இன்னும் பலமாகி விட்டது. அப்பா எங்கும் போகக் கூடாது என்று அடம் பிடித்தான். அவனைத் தன் அபார்ட்மெண்ட்டுக்கு அழைத்துப் போகலாமா என்று ஒரு வினாடி பிராட் எண்ணினான். ஆனால் இப்போதெல்லாம் பெரும் பகுதி நேரம் ஸ்டிபானி அவனுடைய அபார்ட்மெண்ட்டில் வந்து தங்குகிறாள். ஆண்டி அவளைப் பார்க்க நேரிடும். அவளால்தான் அப்பா தனியே போய் இருக்கிறார் என்பதை அறிந்து கொள்வான். அதைப் பிராட் விரும்பவில்லை.

இரண்டாவது வாரமும் சனிக்கிழமையன்று பிராட் வந்து அழைத்துப் போனான். ஆனால் இந்தத் தடவை ஆண்டிக்குப் பழக்கமாகி விட்டதால் அழுது அமர்க்களம் பண்ணவில்லை. நடுநடுவே பேஜும் ஆண்டியும் தாரென்ஸனின் வீட்டுக்குப் போவதும் சாப்பிடுவதுமாக இருந்ததால் ஆண்டி மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு விட்டான். ஆலிஸனையும் இரண்டு தடவை ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பார்த்தான்.

அன்று ஆஸ்பத்திரியிலிருந்து க்ளோவை வீட்டுக்கு அழைத்து வந்திருந்தார்கள். பேஜும் ஆண்டியும் அவளைப் பார்க்கத் தாரென்ஸனின் வீட்டுக்குப் போன போது, முன்னறையில் ஒரு சாய்வு நாற்காலியில் அவள் படுத்திருந்தாள். பேஜ் வாங்கித் தந்திருந்த காஷ்மீர் கம்பளியைக் கால் மீது போர்த்திக் கொண்டிருந்தாள். வலியின் வேகம் இன்னும் முழுதும் அகலவில்லை என்றாலும் வீட்டுக்கு வந்து விட்டோம் என்கிற சந்தோஷத்தில் முகம் மலர்ந்திருந்தாள். இன்னோர் ஆபரேஷன் செய்ய வேண்டியிருக்கும் என்று டாக்டர்கள் சொல்லியிருந்தார்கள். ஆனால் இனிமேல் கை கால்களைச் சரிப்படுத்தி அவள் நன்கு நடமாடும்படி செய்ய வேண்டியதுதான் பாக்கியே தவிர உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை. வலிக் குறைப்புக்காக மாத்திரைகள் கொடுத்திருந்தார்கள். அதைக் கூட அவள் அதிகம் உட்கொள்ளவில்லை – பிறகு அதுவே பழக்கமாகி விடும் என்பதால்.

பேஜும் ஆண்டியும் அங்கே போன சில நிமிடங்களில் ஜேமியும் வந்து சேர்ந்தான். க்ளோவை ஆஸ்பத்திரியில் பலமுறை பார்த்திருந்தாலும் வீட்டுக்கு வருவது இதுவே முதல்

மூலம் : டேனியல் ஸ்டீல் தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

தடவை. கார் விபத்துக்குத் தானும் ஒரு காரணம் என்ற குற்ற உணர்வு இன்னும் அவன் மனத்தில் இருந்து வந்தது. அவன் பேச்சில் கூச்சமும் தயக்கமும் இருப்பதைக் கவனித்த பேஜ், "நாம் வாசல் பக்கம் போகலாமே?" என்றாள் தாரென்ஸனிடம்.

பிஜானும் ஆண்டியும் தோட்டத்தில் விளையாடப் போக, தாரென்ஸனும் பேஜும் சமையலறையில் சிற்றுண்டி தயாரிக்க, தனிமையில் விடப்பட்ட க்ளோவும் ஜேமியும் மனம் விட்டுப் பேசிக் கொள்ள முடிந்தது.

"என் சிநேகிதி ஆலியைப் போய்ப் பார்க்க எனக்கு முடியவில்லை. உன் சிநேகிதன் பிலிப்பை உன்னால் பார்க்கவே முடியாமல் போய் விட்டது. என்ன பயங்கரம்!" என்றாள் க்ளோ.

கார் விபத்தைப் பற்றி வேண்டுமென்றே மேலும் மேலும் பேசி அவன் உள்ளத்திலிருந்த குற்ற உணர்வைக் குறைத்தாள் அவள். ஏற்கெனவே ஆஸ்பத்திரியில் இருந்த நாட்களில் இருவரும் மனம் நெருங்கிப் பழகத் தொடங்கியிருந்தார்கள். பிடித்த இசை, பிடித்த நடிகர், பிடித்த நடிகை, பிடித்த மனிதர், பிடிக்காத மனிதர் என்று பல விஷயங்கள் அவர்கள் பேச்சில் அடிபட்டன.

மனப் பாரம் குறைந்ததும், ஜேமி தமாஷாக, "இன்று நாம் எங்காவது வெளியில் போகலாமா?" என்றான்.

"ஆமாம். டான்ஸ் கிளாசுக்குப் போய்க் கொஞ்சம் ஆடலாமென்று பார்க்கிறேன்," என்று க்ளோ சிரித்துக் கொண்டிருந்தபோது உள்ளே வந்த தாரென்ஸன், "என்ன விஷயம்?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை. சும்மா பேசிக் கொண்டிருந்தோம்," என்றான் ஜேமி. தன்னை வீட்டுக்குள் அனுமதித்ததோடு இவ்வளவு தூரம் க்ளோவுடன் பேசிக் கொண்டிருக்கவும் அனுமதித்தாரே என்று தாரென்ஸனிடம் அவனுக்கு நன்றியும் மதிப்பும் ஏற்பட்டன. "நான் ஏதாவது உதவி செய்ய வேண்டுமானால் சொல்லுங்கள்," என்றான் பணிவோடு.

"தாங்க்ஸ். க்ளோ பாத்ரூமுக்குப் போக வேண்டுமென்று சொன்னால் எனக்குக் குரல் கொடு. வந்து அழைத்துப் போகிறேன்," என்று கூறிவிட்டுத் தாரென்ஸன் மறுபடி வெளியே போய் விட்டான்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் க்ளோ கூப்பிட்டபோது, தாரென்ஸன், பேஜ் இருவருமாகத்தான் அவளைப்



'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம்.
© டேனியல் ஸ்டீல்

பாத்ரூமுக்கு அழைத்துப் போக வேண்டியிருந் தது. அவளைத் திரும்பக் கொண்டு வந்து முன் னறையில் உட்கார்த்தி வைத்து விட்டுத் திரும் பினார்கள்.

இருவருக்கும் ஒன்று புரிந்தது. க்னோவைத் தன்னந்தனியாகத் தாரென்ஸனால் கவனித்துக் கொள்வது முடியாத காரியம் என்பதே அது. பாத்ரூமுக்குள் போனபின் க்னோ சமாளித்துக் கொண்டாளே தவிர, ஒவ்வொரு சிறு காரியத் துக்கும் பிறர் உதவி தேவைப்பட்டுக் கொண்டு தான் இருக்கும். ஆஸ்பத்திரியிலிருந்து வீட் டுக்கு அழைத்து வந்ததோடு பிரச்னை தீர்ந்து விடவில்லை. பிரச்னையின் ஆரம்பமே இனிமேல்தான் என்பது பேஜுக்கும் புரிந்தது. தாரென்ஸனுக்கும் புரிந்தது.

சமையலறையில் காப்பி அருந்திக் கொண் டிருந்தபோது, "எப்படித்தான் சமாளிக்கப் போகிறீர்களோ, பாவம்," என்றாள் பேஜ்.

"உதவிக்கு வரும்படி ஒரு பெண்மணியை அமர்த்தியிருக்கிறேன். தினம் வந்து இரண்டு மணி நேரம் பார்த்துக் கொள்வாள். அந்த நேரத்தில் நான் என் வேலைகளை முடித்துக் கொள்ள வேண்டும்," என்று சொன்னவனைப் பிரமிப்புடன் நோக்கினாள் அவள். எப்படிப் பட்ட மனோதிடம் இவருக்கு! இவ்வளவு பேர் இவரைச் சார்ந்து நிற்கிறார்கள்.... ஏன், நாம் கூடத்தான்... ஆனால் எதற்கும் கலங்காமல் இருக்கிறாரே!...

"உன் நிலைமை எப்படி?" என்றான் தாரென்ஸன். பிராட் பிரிந்து போன இந்த இரண்டு வாரமாக அவளை அவன் அதிகம் சந்திக்கவில்லை.

"சில சமயம் மனசுக்குக் கஷ்டமாக இருக் கிறது. சில சமயம் தைரியம் ஏற்படுகிறது. வேறு சில சமயம் எந்தப் பாதுகாப்பும் இல்லாமல், என்னைக் கவனித்துக் கொள்ள யாரும் இல்லாத மாதிரி...."

"கற்பனை செய்து கொள்ளாதே. இதற்கு முன்னால் மட்டும் உன்னை யார் கவனித்துக் கொண்டார்கள்? நீதானே குடும்பத்தைப் பார்த்துக் கொண்டாய்? உன் கணவன் என்ன செய்தான்?"

"உண்மைதான்," என்று ஒப்புக் கொண் டாள் பேஜ். "அவரிடம் ஒரு சாவி இருப்பதால் அடிக்கடி வீட்டுக்கு வந்து, சமையல் பாத்திரம், துணிமணி அது இது என்று ஏதாவது எடுத்துக் கொண்டு போகிறார். 'இன்னது எடுத்துப் போயிருக்கிறேன்' என்று ஒரு குறிப்பு மட்டும் எழுதி வைத்து விடுகிறார். எப்போது வரு கிறார், எப்போது போகிறார் என்பதே தெரி வதில்லை," என்று சிரித்தாள்.

அடுத்த வாரத்தில் ஒருநாள் பேஜ் ஆஸ் பத்திரியில் ஆலிஸனின் பக்கத்தில் உட்கார்ந்



# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை- அமரர் கல்கி நினைவு நாள்

கதை சொல்வதில் நிகரற்ற நிபுணராக விளங்கிய அமரர் கல்கி, நமது புராதன கலைகளிலும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அவரது நினைவு நாளன்று ஹரிகதை நிகழ்ச்சி நடத்தி, அக்கலையின் அருமை பெருமைகளை ரசிகர்களுக்கு நினைவூட்ட முடிவு செய்துள்ளோம்.

**'கிருஷ்ண லீலா' என்கிற தலைப்பில் ஹரிகதை நிகழ்த்தப் போகிறார்**

**கல்யாணபுரம் ஆராவமுதன்**

**தேதி : டிசம்பர் 5, வெள்ளிக்கிழமை**

**நேரம்: மாலை 6 மணி**

**இடம் : ஸ்ரீநிவாச சாஸ்திரி அரங்கம், லஸ், மயிலை, சென்னை - 600 004.**

**தலைமை : சாவி**

*கல்கி ரசிகர்களும் வாசகர்களும் நிகழ்ச்சிக்கு வந்திருந்து சிறப்பிக்கும்படி அன்புடன் அழைக்கிறோம்.*



## ஜெயின் கமிஷன் தெரியும்; ஜெயினைத் தெரியுமா?

**நீ**திபதி ஜெயினின் முழுப் பெயர் மிலப் சந்த் ஜெயின். 1991 ஜுலையில் டெல்லி உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதியாக சுமார் இரண்டு வருஷம் பணியாற்றி விட்டு ஓய்வுபெற்றவர்.

ஓய்வுபெற்ற சிறிது காலத்துக்குள்ளாகவே ராஜீவ் காந்தி படுகொலை நிகழக் காரணமான சூழ்நிலை குறித்து விசாரிக்க அமைக்கப்பட்ட கமிஷனுக்குப் பொறுப்பு ஏற்கும்படி ஆணை வந்தது.

விசாரணை ஆரம்பித்த 180 நாட்களில் அறிக்கையை சமர்ப்பித்திருக்க வேண்டும். நாட்கள் மாதங்களாகி, மாதங்கள் வருடங்களாகி, ஐந்தாண்டுகள் ஓடி விட்டாலும், இப்போதைக்கு இடைக்கால அறிக்கைதான் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

இளமையில் அரசியலுக்கு வர ஆசைப்பட்டவர். 1957-ல் ஜெய்பூர் மாவட்டத்தில் சாம்பர் தொகுதியில் சி.பி.ஐ. வேட்பாளராய்ப் போட்டியிட்டு தோற்றவர். அதன்பின் ஆஜ்மீர் அரசுக் கல்லூரியில் ஆசிரியர் உத்தியோகம். அப்புறம் கொஞ்ச நாள் அரசு உத்தியோகம். வக்கீலாய் பிராக்டீஸ். கூடுதல் செஷன்ஸ் ஜட்ஜ் பதவி.

அதன்பின் ராஜஸ்தான் மாநில உயர்நீதி மன்ற நீதிபதியானார். தொடர்ந்து, டெல்லி ஹைகோர்ட்டுக்குத் தலைமை நீதிபதி. பிறகு உச்சநீதி மன்ற நீதிபதி.

1975-ல் ஜோத்பூரில் பணியாற்றிய சமயம், ஜெய்ப்பூர் ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச் முன்னாள் தலைவர் உட்பட பல பெரிய தலைகளுக்கு, இளம் பெண்களை பிளாக்மெயில் செய்த குற்றத்துக்காக சிறைத் தண்டனை வழங்கிப் பரபரப்பூட்டியவர்.

– மௌஷ்மி

நன்றி : சண்டே டைம்ஸ்

---

திருந்தபோது தாரென்ஸன் வந்தான். கையில் பிக்னிக் கூடையும் அதில் பகலுணவும் கொண்டு வந்திருந்தான். ''வா, புல்வெளியில் போய் உட்கார்ந்து சாப்பிடலாம்,'' என்றான்.

அப்போதுதான் ஆலிஸனுக்கு ஒரு நர்ஸ் மஸாஜ் செய்து முடித்திருந்தான். இந்தச் சிகிச்சைகள், பயிற்சிகள், சுவாசக் குழாய்கள், ட்யூப்கள், அசைவற்றுக் கோமாவில் கிடக்கும் ஆலிஸன் – எல்லாம் யந்திரம் போலப் பழக்கமாகி விட்டன பேஜுக்கு.

இனி இங்கே வர வேண்டாம் என்று கூட ஓரோர் சமயம் நினைத்துக் கொள்வாள். ஆனால் அவளையும் அறியாமல் அவள் கால்கள் அவளை இங்கே இழுத்து வந்து விடும். நர்ஸ்கள் அவள் வருகையை வைத்துத் தங்கள் கடியாரத்தைக் கூடச் சரி செய்து கொள்வார்கள்.

ஆலிஸனை விட்டு எழுந்து போக மனமில்லாமலே தாரென்ஸனுடன் சென்றாள். சாப்பிட்ட பின்னும் வெகு நேரம் வரை ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு வெகு நேரம் புல்வெளியில் படுத்திருந்தார்கள்.

"இப்படி என்னைப் பார்ப்பதற்கு வந்து கொண்டே இருக்கிறீர்களே, அலுப்பாக இல்லை?" என்று பேஜ் கேட்டான்.

''அலுப்பா! உன்னிடம் எனக்குள்ள காதலை நீ அறியவில்லை, பேஜ். ஐ லவ் யூ. ரொம்ப ரொம்ப ரொம்பக் காதலிக்கிறேன். உன்னிடம் எனக்கு என்றைக்குமே அலுப்பு ஏற்படாது. ஒன்று சொல்லட்டுமா? நமக்குப் பத்துக் குழந்தைகள் பிறக்க வேண்டும் என்பது என் ஆசை!"

"ஐயோ!" என்று சிரித்து விட்டான் பேஜ். "ஆண்டி கூட ஒருநாள் பள்ளிக்கூடத்திலிருந்து வரும்போது, 'எனக்கு ஒரு தம்பிப் பாப்பா பிறக்குமாம்மா?' என்று கேட்டான். அதற்கெல்லாம் வயசாகி விட்டது." என்று கூறியவாறு ஆஸ்பத்திரிக்குத் திரும்பினான் அவள். கூடவே தாரென்ஸனும் வந்தான். கைகோத்துக் கொண்டு, தாழ்வான குரலில் சிரித்துப் பேசிக் கொண்டு ஆலிஸனின் படுக்கையைத் திரும்ப அடைந்தார்கள்.

ஆலிஸனின் கைகளை வருடிக் கொடுப்பதும், விரல்களைப் பிரித்து மூடுவதும், அவளுக்குக் கேட்கிறதா இல்லையா என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் தான் பாட்டுக்கு அவளிடம் பேசிக் கொண்டிருப்பதையும் பார்த்தபோது, இந்த மாதிரி ஒரு தாயை உலகத்தில் வேறெங்கும் பார்க்க முடியுமா என்று தாரென்ஸன் ஆச்சரியப்பட்டான்.

"வெளியில் புல்வெளி எவ்வளவு அழகாய் இருக்கிறது தெரியுமா ஆலி? தாரென்ஸன் அருமையான சாப்பாடு எடுத்து வந்திருந்தார். நாங்கள் அங்கே உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்

டிருந்தோம்...'' என்று பேஜ் சொல்லிக் கொண்டிருந்தபோது –

திடீரென்று ஆலிஸனிடமிருந்து ஒரு மெல்லிய முனகல் கேட்டது. அவள் தலை மெதுவே தாயை நோக்கித் திரும்பியது.

பேஜுக்கு மூச்சு நின்றது. பேச்சை நிறுத்திக் கொண்டு மகளை வெறித்துப் பார்த்தாள். ஆலிஸனின் அசைவைப் பார்த்ததால் அவள் விழிகள் குத்திட்டு நின்று விட்டன.

ஆனால் அதன் பிறகு ஆலிஸனிடம் வேறெந்தச் சலனமும் இருக்கவில்லை. பழைய படி ஆகிவிட்டாள். கருவிகளின் ரீங்காரம் மட்டுமே கேட்டது.

பிரமித்துப் போனவளாகத் தாரென்ஸனை நோக்கினாள். "ஆலி அசைந்தாள்... தெய்வமே! நீங்கள்... நீங்கள் பார்த்தீர்களா? ஆலி அசைந்தாள்! அசைந்தாள்!" என்று கூவினாள்.

நர்ஸ்கள் தங்கள் தங்கள் இருக்கையில் இருந்தபடியே அந்த அசைவைக் கவனித்திருந்தார்கள். இரண்டு நர்ஸ்கள் ஓடி வந்தார்கள்.

"என் பக்கமாக முகத்தைத் திருப்பினாள்! என்னைப் பார்த்துத் திரும்பினாள்!" என்றாள் பேஜ். குரல் தழுதழுத்தது. கண்களிலிருந்து கண்ணீர் கொட்டியது. குனிந்து மகளை முத்தமிட்டாள். "என் கண்ணம்மா, நீ என் பக்கமாய்த் திரும்பினாய், இல்லையா? நான் பார்த்தேனே? உன் முனகல் எனக்குக் கேட்டதடி, என் செல்லமே!"

தாரென்ஸனுக்கும் கண்ணில் நீர் தளும்பியது. இதற்குள் நர்ஸ்கள் விரைந்து சென்று டாக்டர் ஹேமர்மேனை அழைத்து வந்தார்கள். தாங்கள் கவனித்ததைச் சொல்லி, பதிவாகியிருந்த டேப்பைக் காட்டினார்கள். மூளையின் அசைவு டேப்பில் அலைகளாகத் தெரிந்தன.

ஆனால் டாக்டர் ஹேமர்மேன் பரபரப்படையவில்லை. "எதனால் இப்படி என்று சொல்வதற்கில்லை," என்றார் எச்சரிக்கையுடன். "இது ஒரு நல்ல அறிகுறியாகவும் இருக்கலாம். அல்லது தற்செயலான விஷயமாகவும் இருக்கலாம். ஆனால் நினைவு திரும்பக்கூடும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறது... பார்க்கலாம்..."

அவருடைய பேச்சினால் பேஜின் ஆனந்தம் குறையவில்லை. ஆலிஸனைப் பார்த்தபடி அருகிலேயே நின்றிருந்தாள். அன்று பூரா ஆலிஸனிடம் வேறு சலனம் தெரியவில்லை. ஆனால் மறுநாள் காலை மறுபடி அவள் முகம் பேஜை நோக்கித் திரும்பியது. உடனே பிராடிடம் சொல்ல வேண்டுமென்று அவனுடைய அலுவலகத்துக்குக் கூப்பிட்டாள். பிராட் வெளியூர் போயிருப்பதாகச் சொன்னார்கள். அவன் தங்கியிருந்த ஓட்டலைத் தேடிக் கண்டுபிடித்து அன்றிரவு தகவல் கூறினாள். ஆனால், பிராட் பரபரப்படையக் காணோம். டாக்டர் சொன்ன மாதிரியே அவனும், 'பார்க்கலாம்...' என்றான்.

தாரென்ஸனிடம் சொன்னபோதும் அப்படித்தான். ஆனால் பேஜின் பரபரப்பு அடங்கவில்லை.

"நிச்சயமாய் நான் பேசுவது ஆலிக்குக் கேட்கிறது. ரொம்ப ஆழமான இருட்டுப் பொந்தில் கூவினால் முதலில் எந்தச் சத்தமும் வராது. எதிரொலிதான் கேட்கும். பொந்தின் ஆழத்தில் யாரேனும் இருக்கிறார்களா இல்லையா என்பது கூடத் தெரியாது. ஏழு வாரமாக நான் அப்படித்தான் கூவிக் கொண்டிருந்தேன். திடீரென்று இப்போது பதில் குரல் கேட்கிறது...." என்று அவள் சொன்னபோது, "ஆமாம்..." என்றான் தாரென்ஸன். அவளுக்கு ரொம்பவும் அதிகப்படியாக நம்பிக்கை ஏற்படுத்திவிடக் கூடாது என்று அவன் அஞ்சுவது தெரிந்தது.

அடுத்த ஒரு வாரத்துக்கு. தினம் தினம் ஆலிஸன் வெகு லேசாக அசைந்தாள். ஆனால் கண்ணைத் திறக்கவில்லை. வாய் திறந்து பேசவில்லை. அம்மா சொல்வது



அவளுக்குக் கேட்கிறது என்பதற்கான எந்த அறிகுறியும் தென்படவில்லை. இருந்தாலும் பேஜின் நம்பிக்கை நாளுக்கு நாள் வளர்ந்தது.

அது மட்டுமல்ல, அவளுக்கும் தாரென்ஸனுக்குமிடையே இருந்த நெருக்கமும் வளர்ந்து கொண்டிருந்தது. உள்ளத்தாலும் உடலாலும் தாரென்ஸனுடன் அவள் ஒட்டிய போது, பிராடிடம் இல்லாத எத்தனை அருமையான குணங்கள் இவனிடம் இருக்கின்றன என்பதைப் பேஜ் உணர்ந்தாள். அது மட்டுமின்றி, தங்கள் இருவர் குழந்தைகளும் ஒருவரோடொருவர் பிரியமாகப் பழகியதும் அவள் உள்ளத்துக்கு நிறைவு வந்தது.

முதல் மனைவி டானாவினால் ஏற்பட்ட கசப்புகளுக்குப் பின் இப்போதுதான் தாம்பத்தியத்தின் சுகத்தை அனுபவித்தான் தாரென்ஸனும்.




அந்தச் சனிக்கிழமை பிராட் வந்து ஆண்டியைத் தன்னுடன் கூட்டிச் சென்றான். ஓட்டலில் சாப்பிட அழைத்துப் போனவன், முதல் தடவையாக ஸ்டிபானியை அவனுக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

அந்த முதல் சந்திப்பிலேயே ஆண்டிக்கு அவளைப் பிடிக்கவில்லை. முரட்டுத்தனமாக என்னென்ன பேச முடியுமோ அவ்வளவும் பேசினான். என்னென்ன செய்ய முடியுமோ அவ்வளவும் செய்தான். 'உன் மூக்கு ஏன் இத்தனை நீளமாயிருக்கிறது?' என்றான். 'நீ ஏன் இப்படி டைட் பாண்ட் போட்டிருக்கிறே? நல்லாவேயில்லை. எங்க அம்மா அழகா, நல்லா டிரெஸ் பண்ணிப்பாள்' என்றான்.

'இப்படியெல்லாம் பேசக் கூடாது' என்று ரகசியமாக ஆண்டியைக் கண்டித்தான் பிராட்.

'எனக்கு அவளைக் கண்டால் பிடிக்கலே. வெறுப்பா இருக்கு,' என்று ஆண்டி தாழ்ந்த குரலில் பதிலளித்தது ஸ்டிபானிக்குக் கேட்டு விட்டது.

"வெறுப்பாய் இருந்தால் இனிமேல் உன் அப்பாவுடன் வராதே," என்றாள் ஸ்டிபானி கோபமாக.

இருவருக்கும் சமரசம் செய்ய முயன்றான் பிராட். முடியவில்லை. மூவருமாய் எங்கெங்கோ சுற்றினார்கள். இருந்தும் ஆண்டி அவளுடன் பேசத் தயாராயில்லை. ஸ்டிபானியை அவள் வீட்டில் இறக்கி விட்டு விட்டு, ஆண்டியைத் தன் அபார்ட்மெண்ட்டுக்கு அழைத்துப் போனான் பிராட். பெண்கள் உபயோகப்படுத்தக்கூடிய சோப்பு, சீப்பு, லிப்ஸ்டிக், உள்ளாடை முதலியவற்றை அங்கே கண்ட போது ஆண்டிக்கு விஷயம் புரிந்து விட்டது. ஸ்டிபானி இங்கே வருகிறாள் என்பதை ஊகித்துக் கொண்டான். சிறுவனானாலும், அம்மாவுக்கும் அப்பாவுக்கும் பிரிவு ஏற்பட்டது இவளால்தான் என்பதை விளங்கிக் கொண்டான்.

வீடு திரும்பியவனின் முகத்தைப் பார்த்தவுடன் பேஜுக்கும் எல்லாம் புரிந்து விட்டது. ராத்திரி அவனை அணைத்துக் கொண்டு படுத்திருக்கையில் ஆண்டி அழுது கொண்டே, "எனக்குத் தெரிஞ்சிட்டுதும்மா. அப்பாவோட கேர்ள் ஃப்ரண்ட் ஸ்டிபானியைப் பார்த்தேன். அசிங்கமான மூஞ்சி. அப்பாவும் அவளும் அடுத்த மாசம் ஐரோப்பாவுக்கு வெகேஷனுக்குப் போகப் போறாங்களாம். பேசிட்டிருந்தாங்க..." என்றான்.

பேஜ் பெருமூச்சு விட்டாள். ஐரோப்பாவுக்குப் போக வேண்டுமென்று எவ்வளவோ முறை அவள் பிராடிடம் கேட்டிருக்கிறாள். அவன் அழைத்துப் போனதில்லை.

''அப்பாவையும் அவர் சினேகிதியைப் பற்றியும் இப்படியெல்லம் நீ பேசக் கூடாது. தூங்கு,'' என்றாள். ஆனால், பிராடுக்கும் தனக்குமிருந்த கொஞ்ச நஞ்ச உறவும் முறிந்து விட்டது என்று அவள் உள்ளுணர்வு சொல்லியது.

(தொடரும்)

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

நல்ல, ஜாலியான நேரம் வந்திரிச்சிங்க. குடும்பச் சூழ்நிலைல இதுவரைக்கும் இருந்து வந்த மேகமூட்டமெல்லாம் விலகி, உறவுகள் பலமாகும். வயசானவங்களால உதவிகள் கிடைக்கும். வியாபாரிங்களுக்கு தொழில்ல நல்ல வளர்ச்சி இருக்கும். கணக்கு, கம்ப்யூட்டர், எழுத்துத் தொழில்ல இருக்கறவங்களுக்கு டைம் ஓஹோ! பணம் தாராளமாகவே புழங்கும். அதுக்காக தாம்தூம்னு செல்வு பண்ண வேணாம்! ஏன்னா, வாரக்கடைசில குழந்தைகளுக்கு ஏதாவது லேசா உடம்பு சரியில்லாம போயி டாக்டருக்குத் தர வேண்டி வரலாம்!



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எதிர்பாராத அதிர்ஷ்டம் ஒண்ணு அடிக்கப் போகுது. அது உங்க தொழில் ரீதியிலோ, தனிப்பட்ட முறையிலோ இருக்கலாம். தாராளமான பணப் புழக்கம். உல்லாச நிகழ்ச்சிகள், வெளியூர்ப் பயணம்னு கொஞ்சம் மகிழ்ச்சி தரக் கூடிய விஷயங்களாவே நடக்கும். வீட்டுல லேசா மனஸ்தாபங்கள், பிரச்னைகள் வந்தாலும் உடனே சரியாப் போயிடும். எதுக்கும் உணர்ச்சிவசப்படாதீங்க; கோபப்படாதீங்க! புதுசா வீடு, நிலம் மாதிரி சொத்து சேர்க்கிற யோசனை இருந்தால் மட்டும் கொஞ்ச நாள் தள்ளிப் போடுங்க.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

சொந்தக்காரங்க, நண்பர்களோட அளவா, பார்த்துப் பழகுங்க. வாக்குவாதம் வேணவே வேணாம்! மன அமைதியைக் குலைக்கற மாதிரி சம்பவங்கள் சிலது நடக்கலாம். ஆனால் உத்யோக ரீதியில பலனெல்லாம் பிரமாதமாத்தான் இருக்குது. குறிப்பா, ஓவியம், இசை, எழுத்துத் துறைல இருக்கறவங்களுக்கு வளமான சமயம். புதிய வாய்ப்புகள் வீட்டுக் கதவைக் கட்டாயம் தட்டும். சிலருக்கு திடீர் வெளியூர்ப் பயணங்கள் ஏற்படலாம். தவிர்க்க முடியாத அந்தப் பயணங்களின் போது ரொம்ப கவனமா இருக்க வேண்டியது அவசியம்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

ரொம்ப நாளா, தேக்கத்துல இருந்து வந்த சில ஆசைகளுக்கு இந்த வாரம் செயல் வடிவம் கிடைக்கும். ராணுவம், பொறியியல் துறையில இருக்கறவங்களுக்கு மேலதிகாரிகளோட ஆதரவும் பாராட்டும் கட்டாயம் கிடைக்கும். பெண்கள், வெள்ளிக்கிழமைக்கு அப்புறம் கொஞ்சம் கவனமா இருக்கணும். வீட்டுல புருஷனோட, மாமியாரோடவெல்லாம் வலுக்கட்டாயமா சண்டை போடற 'மூட்' வந்தால், துடைச்சி தூர வைங்க! மனஸ்தாபங்களுக்கு நீங்க காரணமா இருக்கக் கூடாது. அரசியல்வாதிகளும் இப்ப கொஞ்சம் கவனமா இருக்கணும். அறிக்கைப் போர் நடத்தறதையெல்லாம் கொஞ்சம் ஒத்தி வைங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கவனமா வேலை பார்த்தாலே பாராட்ட மாட்டாங்க. நீங்க கொஞ்சம் அசால்டா இருந்துட்டா வேற வினையே இல்லை. மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகிற சந்தர்ப்பங்கள் இந்த வாரம் வர்றாப்பல தெரியுது. பார்த்து நடந்துக்கங்க. பண விஷயத்துல கொஞ்சம் கவனமா இருங்க. யாருக்கும் கடன் குடுத்துட்டு, கையைப் பிசைஞ்சிக்கிட்டு நிக்காதீங்க. தவிர, உங்களுக்கே கூட செலவு கட்டுக்குள்ளே இருக்காது. குடும்பத்துல சில சுபகாரியங்கள் நடக்க இருக்கறதால, நிறைய மொய் எழுத வேண்டி வரும். பெண்களுக்கு, நினைச்சது நடக்கற நேரம். ஆனா அளவோட நினைங்க!



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

முக்கியமான கிரகங்கள் எல்லாம் நல்லபடியா உலவறதால, இந்த வாரம் உங்களுக்கு மகிழ்ச்சியாவே ஆரம்பிக்குது. உங்க மதிப்பு, அந்தஸ்து உயரும் நேரம் இது. வீட்டுலயும் விருந்து, கேளிக்கை, உல்லாசம்னு ஜாலியாத்தான் இருக்கும். சில பேருக்கு வீடு அல்லது வாகனம் வாங்கற யோகமும் இருக்குது. சில புதிய திருப்பங்களுக்கு அரசில்வாதிகள் தயாரா இருக்கறது நல்லது. உத்யோகஸ்தர்களுக்கும் பதவி உயர்வு அல்லது விருப்பமான இடமாறுதல் இருக்கும். பங்குமார்க்கெட் செல்ல ஆர்வம் உள்ளவர்களுக்கு இப்ப லாபம் கிடைக்கற நேரம். சரியா பயன்படுத்திக்கங்க. வாய்

ஜாலம், புத்தி சாதுர்யம் - இதனால பெண்களுக்கு நல்ல மதிப்பு கூடப் போற சமயம் இது.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

ஏதாச்சும் வெளில சொல்ல முடியாத பிரச்னையால கொஞ்ச நாளா கஷ்டப்பட்டுட்டிருக்கீங்களா? எதிர்பாராத நண்பர் அல்லது முதியவர் யாராவது ஒருத்தரால உங்க பிரச்னை இப்ப தீர்ந்திருக்கும். எக்ஸ்போர்ட் பிஸினஸ் செய்யறவங்களுக்கு நல்ல நேரம் இது. புது ஒப்பந்தங்களுக்கு வாய்ப்பு இருக்குது. வீண் அலைச்சலைக் குறைச்சிக்கணும். சிலருக்கு அதனால உடம்பு முடியாம கூடப் போகலாம்! வாரக் கடைசில சில பேருக்கு புண்ணியக்ஷேத்திரங்களுக்குப் போகிற யோகம் இருக்குது!



**விருச்சிகம்** : *(விசாகம் 4-பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

முன்னெச்சரிக்கை ரொம்ப அவசியம். வீண் பேச்சு, அபவாதம், வம்பு தும்பு வேணாம். மௌனம் கலகநாஸ்தி! தெரிஞ்சவங்கதானேன்னு யாருக்கும் ஜாமீன் கையெழுத்தெல்லாம் போடாதீங்க. கவுத்து விட்டுடும்! பணப் பிரச்னை இருக்கும். பசங்க உடல்நலன் பாதிக்கப்படலாம். ஸ்பெகுலேஷன், ஷேர் பக்கம் போகாதீங்க. சில பேருக்கு உஷ்ணம் காரணமா வயிறு கொஞ்சம் பிராப்ளம் இருக்கலாம். முருகனை வழிபடுங்க! கஷ்டத்தோட சுமை தெரியாம இருக்கும்.

**சிம்ம ராசிக்காரரான நியூஸ் வரதாஜன் கொஞ்சம் கவனமா இருக்க வேண்டிய வாரம் இது! யாருக்கும் கடன் குடுக்காதீங்க! அப்புறம் வீட்டுல சில சுப காரியங்கள் நடக்கப் போவுதாம்!**





**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

கிரகங்கள் செய்யற சதியால இந்த வாரம் அடிக்கடி உணர்ச்சிவசப்படுவீங்க. அது தப்பில்லை. ஆனா எதிலும் அவசரப்பட்டு முடிவெடுக்காதீங்க. சினிமா, பொருளாதாரம் - இந்தத் துறையைச் சேர்ந்த தனுசு ராசிக்காரர்களுக்கு இந்த வாரம் வளமா இருக்கும். நீண்ட நாள் பிரச்னையெல்லாம் வந்து சேரும். மூத்த அதிகாரிகளோடு, வேலை பார்க்கற இடத்துல மனஸ்தாபம், கருத்து வேறுபாடு வரலாம். முன்னேற்ற வாய்ப்புகள் வர்றது கொஞ்சம் தாமதமாகும். எதுக்கும் ஆஞ்சநேயரைக் கொஞ்சம் தாஜா பண்ணி வெச்சிக்கங்க.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க பேச்சுக்கு மதிப்பும் மரியாதையும் கூடி வர்ற சமயம் இது. எடுத்த காரியங்களில் வெற்றி, நினைச்சது நடக்கற யோகம், தாராளமான பணப்புழக்கம், பாராட்டுக்குரிய செயல் திறன்... அடிச்சி சொல்லலாம், இந்த வாரத்து சூப்பர் ஸ்டார் நீங்கதான். ஆனா, கொஞ்சம் கவனக்குறைவா இருந்தீங்கன்னா, அப்பப்ப சின்ன இடர்ப்பாடுகள் வரும். ஜாக்கிரதையா சமாளிக்க வேண்டியது முக்கியம். பெண்களுக்குப் பிரமாதமான டைம்! புதிய ஆடைகள், வீட்டுப் பொருட்கள் வாங்குற யோகம் இருக்கு. வாரக் கடைசில எதிர்பாராத அதிர்ஷ்டம் ஏதாவது அடிச்சி, உங்களை சந்தோஷத்துக்கு முன் ஆட வைக்கும்.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க கஷ்ட நேரமெல்லாம் போகத் தொடங்கியாச்சு. தன்னம்பிக்கையோட, முழு வீச்சுல செயல்ல இறங்குங்க. வெற்றி உங்க பக்கம்! இந்த வாரம் ஒரு கடிதம் உங்களுக்கு எங்கேருந்தாவது மகிழ்ச்சியைக் கொண்டு வரும். பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்களுக்குப் புகழ் பல மடங்கு கூடற சமயம் இது. வீடு, மனை வாங்கறதானா, ஒத்திப் போடாம இப்ப செஞ்சிடுங்க.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பொருளாதார ரீதியில பிரச்னை எதுவும் இருக்காதுங்க. உங்களோட ஆற்றல், செய் நேர்த்தியால எதுலயும் மதிப்பும் பாராட்டும் வாங்குவீங்க. திட்டமிட்டபடி முக்கியமான காரியங்கள் நிறைவேறும். உங்களுக்கு எதிரா யாராவது (தொழில் ரீதியில்) சதி பண்ணிட்டிருக்கறதா சந்தேகப்பட்டீங்கன்னா, அந்த ஆசாமி இப்ப அம்பலமாயிடுவார்! சில பேருக்கு மகான்கள் அல்லது புண்ணியக்ஷேத்திர தரிசனம் கிடைக்கும். குடும்பத்துல அபிப்பிராய பேதம் காரணமா லேசா இறுக்கம் வரக்கூடும். உங்க சாதுர்யத்தால அதைப் போக்கி, சுமூகம் காக்கறது உங்க கடமை! ●

**நவம்பர் 26 முதல் டிசம்பர் 2 வரை**

குறையொன்றுமில்லை

பிரசாத வேட்டைக்காரரிடம் திரும்புவோம். 'கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா' என்ற இருபத்தேழாவது பாட்டுக்குரிய நாளில் கையில் சர்க்கரைப் பொங்கலை வாங்குகிறார். வாங்கியவர் அதைச் சாப்பிட்டு முடித்ததும் கையிலே நிறைய ஈக்கள் வந்து உட்கார்ந்தனவாம். ஈக்களை ஓட்டுவதற்காக இரு கைகளையும் சேர்த்து அவன் தட்டுகிறான். அந்த கணத்திலே, உள்ளே கர்ப்பகிருஹத்தில் லக்ஷ்மிநரசிம்மனுக்குக் கற்பூர ஹாரத்தி ஆகிறது.

"நித்தியம் வந்து கை நீட்டிப் பிரசாதம் வாங்கிப் போகிறவனாயிற்றே இவன்... இன்றைக்கு நம்மைப் பார்த்துக் கை கூப்புகிறானே... இவனுக்கு என்ன கொடுக்கலாம்?..." என்று யோசனை பண்ணுகிறானாம் பகவான்!

வெளியே வீதியிலே ஒருவர் அவசரமாக சைக்கிளில் போகிறார். ஒரு இடத்தில் பாகவதோத்தமர்கள் எல்லாம் உட்கார்ந்திருக்கிறார்கள். ஏதோ பகவத் விசாரம் நடக்கிறது. என்ன நடக்கிறது என்பது சைக்கிளில் போகிற வருக்குத் தெரியாது. உள்ளே வந்து உட்கார்ந்து கொள்ளவும் அவகாசம் இல்லை. வேகமாகப் போகிறார். போகிறவர், ஒரு கணம் ஹாண்டில் பாரிலிருந்து கையை எடுத்துவிட்டு, இந்த திக்கை நோக்கிக் கும்பிடுகிறார்... அதற்கே அவருக்குப் பலன் உண்டு!

இப்படியெல்லாம் பகவான் நமக்கு நிறைய புண்ணியத்தைச் சேர்க் கிறான். அவதார காலத்திலே தானும் பரீட்சை செய்து செய்து நமக்கு அனுக்கிரஹமும் செய்கிறான்.

கிருஷ்ணாவதார காலத்திலே தனது கால் கட்டை விரலை அதர பல்லவத்திலே வைத்து சுவைத்துப் பரீட்சிப்பதைச் சொன்னேன்.

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

"பாகவதோத்தமர்களும், ரிஷிகளும் மகான்களும் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இந்தத் திருவடியைப் பற்றுகிறார்களே... இதில் அப்படியென்ன இனிமை கிடைக்கிறது?" என்று சோதித்துப் பார்க்கிறதாம் அந்தக் குழந்தை.

உலகமே இனிமை மயமாய் இருக்க வேண்டுமானால் அந்தத் திருவடி யைப் பற்ற வேண்டும் என்பதைக் காட்டுகிறது.

தேன் போன்று எங்கும் இனிமை இருக்க வேண்டும். பசுக்களெல்லாம் தேன் போன்று இனிமையான பாலைக் கொடுக்க வேண்டும். இந்தத் தாவர வர்க்கமெல்லாம் தேன் போன்ற காய் கனிகளைக் கொடுக்க வேண்டும். உலகமெல்லாம் மதுவாக- இனிமையாக விளங்க வேண்டும். இதெல்லாம் நடப்பதற்கு பகவானுடைய திருவடியிலேயிருந்து வடிகிற அந்த மதுவை நினை என்கிறது வேதம்.

அது மட்டுமா...? 'என் நாவில் எப்போதுமே தேன் சிரமிக்கட்டும்' என்று பிரார்த்திக்கச் செய்கிறது. அந்த இனிமையான பேச்சு வல்லமையும் பகவா னுடைய திருவடி பலத்தினாலேதான் கிடைக்கும்.

வாக்கினிமையை வேதம் கொண்டாடுகிறது. அந்த வாக்கினால்தான் ஒருவர் உயர முடியும் என்கிறது. நாம் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள் வதெல்லாமே அந்த வாக்கினால்தானே... அதனால் வாக்கு பலம் நல்ல முறையிலே இருக்க வேண்டும். அந்த நல்ல வாக்கு நமக்குக் கைவர விஷ்ணு பத தியானம் அவசியம் என்கிறது வேதம்.

மதுவாய் வாக்கு இருப்பவரைக் கண்டால் எல்லோருக்கும் பிடித்திருக் கிறது. சர்வ லோக ப்ரியத்வம்! எல்லோருமே வாக்கினாலே கவரப்பட்டு அத்தனை பேரும் ப்ரியமாய்ச் சொல்ல ஆரம்பிக்கிறார்கள்.

கொடுமையான வாக்கிருந்தால் யாரும் அவன் பக்கம் நெருங்க மாட் டார்கள். நன்றாக நாம் ஒரு விஷயத்தை கவனிக்க வேண்டும்:

உலகத்திலே கழுதை இருக்கிறது. அது யாருக்கு என்ன அபகாரம் செய் தது..? குயில் இருக்கிறது...' அது யாருக்காவது ஏதாவது உபகாரம் பண்ணி யதா?

கழுதை, ஒருத்தருக்கும் அபகாரம் செய்யவில்லை; குயில் யாருக்கும்

உபகாரம் செய்யவுமில்லை. ஆனால் எல்லோரும் குயிலை விரும்புகிறார்கள். கழுதையை வெறுக்கிறார்கள்.

காரணம் என்ன...? குயிலானது வஸந்த காலத்திலே, அழகாக பஞ்சம ஸ்வரத்திலே கூவுகிறது. அந்தக் குரல் இனிமை- இருக்கவே தான் எல்லோரும் குயிலை விரும்புகிறார்கள். கழுதை கத்துகிறது என்பதால் அதைக் கண்டால் யாருக்கும் பிடிக்கவில்லை.

ஆகையினாலே, நல்ல வாக்கு, இனிமையான வாக்கு ஏற்பட வேண்டுமானால் விஷ்ணு பத தியானம் அவசியம்- சுத்தம் விஷ்ணு பத தியானம்!

அதே போல் சுத்தம் ஏகாதசி வ்ரதம் (விரதம்).

ஏகாதசி வ்ரதம் என்பது பரம சுத்தம். ருக்மாங்கதன் சரித்திரம் இருக்கிறதே, அது ஏகாதசி மகாத்மியத்தைச் சொல்கிறது. அம்பரீஷ மஹரிஷியினுடைய சரித்திரம் த்வாதசி விரத மகாத்மியத்தைச் சொல்கிறது.

த்வாதசி விரதத்தை அனுஷ்டித்தவர் அம்பரீஷ மஹரிஷி. த்வாதசி விரதத்தை ஒருத்தர் அனுஷ்டித்து விட்டால் ஏகாதசி விரதமும் அதில் அடக்கம்.

*தசமி அன்று இரவு உபவாஸம் இருந்து, ஏகாதசி அன்று உபவாஸம் இருந்து, துவாதசி அன்று அந்த திதி போவதற்குள்ளே **பாரணை பண்ணிவிட வேண்டும். துவாதசி திதி போவதற்குள்ளே பாரணை பண்ணினால் தான் அதற்கு துவாதசி விரதம் என்று பெயர். ஏகாதசி விரதத்துக்கு, அந்தத் திதி போன பிறகும் பாரணை பண்ணலாம்; அதற்குப் பலன் உண்டு.

த்வாதசி விரதம்தான் கஷ்டமானது. ஏன் என்று கேட்டால், அதற்கு நிதர்சனம் பராசர ஸ்ம்ருதியிலே சொல்லப்பட்டிருக்கிறது:

பசுவை ஒருத்தர் எட்டி உதைத்துவிட்டாராம்! அதற்கு ஏதேனும் பரிகாரம் இருக்கிறதா என்று கேட்டால் மனு ஸ்ம்ருதியிலே எதுவும் கிடையாது. நரகத்துக்குப் போய் சித்ரவதையை அனுபவித்தே ஆக வேண்டும்!

ஆனால் பராசர ஸ்ம்ருதியிலே அப்படிச் சொல்லவில்லை! அந்த ஸ்ம்ருதியிலே நிறைய விதி விலக்குகளும் பிராயச்சித்தங்களும் வருகின்றன.

படுத்திருக்கிற பசுவை எட்டி உதைப்பவன் என்ன பிராயச்சித்தம் செய்ய வேண்டும்..?

ஒரு நல்ல நாளில் யாத்ரா தானம் செய்து தீர்த்த யாத்திரை போய் நீராட வேண்டும். அதன் பிறகு தசமி, ஏகாதசி உபவாஸம் இருக்க வேண்டும். ஏகாதசி உபவாஸம் இருந்து, துவாதசி அன்று காலை ஆறரை மணிக்குள் பாரணை பண்ண வேண்டும். அதற்குப் பிறகு பகவத் கீதை, வேதம் தெரிந்தால் வேதம்.. பாராயணம் பண்ணி, ராமாயணம், பாரதம் பாராயணம் பண்ணி, மாலையிலே விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லி, ஒன்பது மணிக்கு மேலே தூங்கி எழுந்துவிட்டால்... பிராயச்சித்தம் பூர்த்தியாகும்.

பசுவைக் காலால் உதைப்பது சுலபம்...! பிராயச்சித்தம்...? சுலபத்திலே பண்ண முடியாதபடி எவ்வளவு கஷ்டமானதாக வைத்திருக்கிறது பாருங்கள்... அதில் சொல்லியிருக்கிறபடி, யாத்ரா தானம் கொடுத்து, யாத்திரை போய் வந்து விரதம் இருந்து, துவாதசி அன்று காலை ஆறரை மணிக்கு விரதத்தை முடிக்கிற வரையிலும் கூட எல்லாவற்றையும் செய்துவிடலாம். அதற்குப் பிறகு செய்ய வேண்டியது இருக்கு பாருங்கள்... அதுதான் கஷ்டம்! பாராயணம் எங்கேயிருந்து பண்ணுவது...? பிரசாதம் வயிற்றிலே விழுந்ததோ இல்லையோ, நம்மை அப்படியே கீழே கொண்டுபோய்த் தள்ளிவிடும்! நன்றாகத் தூக்கம் வரும்!

துவாதசி அன்று மத்தியானம் படுத்துத் தூங்கி விட்டால் என்ன கதி...! விரத பலன் போய்விடும்! மறுபடியும் யாத்திரைதான்! இதைப் போலவே எத்தனை தடவைதான் யாத்திரை போவது!

இந்தக் காரணத்தாலேதான் ஏகாதசி விரதம், துவாதசி விரதத்தைக் காட்டிலும் சுலபமானது என்று சொன்னது!

பரமாத்மா என்ன சொன்னான் துரியோதனனிடம்?... சுத்தம் ஏகாதசி விரதம்! ருக்மாங்கத சரித்திரத்தில் எல்லோரும் ஏகாதசி விரதம் இருந்து உயர்கதி அடைந்ததாக வருகிறது. அப்படி உயர்கதி அடைந்து விட்டதாலே பாப தேவதைக்கு மிகுந்த கஷ்டம் ஏற்பட்டுப் போயிற்றாம். எங்கே போவதென்றே அதற்குத் தெரியவில்லையாம்!

நேராக பிரும்மாவிடம் போயிற்று பாப தேவதை...

"என்னைப் படைத்துவிட்டு, எனக்கு வேலையில்லாமல் பண்ணிவிட்டாயே... எனக்கு இடமே இல்லையே... எங்கே போவேன்..!" என்றது.

பிரும்மா அதற்கு ஒரு வழி சொன்னார்:

"ஏ பாபமே! நீ போய் முழுதாய் இருக்கிற அரிசியிலே புகுந்து கொள்... உனக்கு க்ஷேமம்

---

* தசமி– பௌர்ணமி அல்லது அமாவாசையிலிருந்து பத்தாம் நாள். ஏகாதசி– பதினோராம் நாள். துவாதசி– பன்னிரண்டாம் நாள்.

** பாரணை– புளி சேர்க்காமல் உணவு கொள்ளுதல்.

ஏற்படும்..." என்றார்!

எதற்காக அப்படிச் சொன்னாராம் பிரும்மா...?

ஏகாதசி விரதத்தன்று, முழுதாக இருக்கிற அரிசியை யார் எடுத்துச் சாப்பிடுகிறார்களோ, அவர்கள் பாபத்தையே சாப்பிடுகிறார்கள் என்று அர்த்தம்! அரிசிக்குள்ளே பாபம் புகுந்திருக்கிறது அல்லவா...!




அந்தப் பாபம் போக வேண்டு மென்றால் என்ன செய்ய வேண் டும்?... அரிசியை இரண்டாக உடைத்து, 'அன்னத்தை பின்னம் பண்ண' வேண்டும்.

அதாவது, சாதமாகச் சாப்பிடாதே, பல காரமாகச் சாப்பிடு என்று அர்த்தம். அரிசியை உடைக்கும் போது பாப தேவதை ஓடிப் போய்விடுகிறது!

முழு உபவாஸம் இருக்க முடியாதவர்கள் கஞ்சியாக (அரிசியை உடைத்துக் காய்ச்சி) சாப்பிடலாம். இல்லாவிட்டால் உப்புமா வாகச் செய்து சாப்பிடலாம். முழுசாகச் சமைத்து சாதமாகச் சாப்பிடாதே! என்று பொருள்.

ஆக, சுத்தம் ஏகாதசி வ்ரதம் என்கிறான் பகவான்.

மறுபடியும் முழுசாக நினைவு படுத்து கிறேன்:

சுத்தம் பாகவதஸ்யான்னம்
சுத்தம் பாகீரதி ஜலம்
சுத்தம் விஷ்ணு பத த்யானம்
சுத்தம் ஏகாதசி வ்ரதம்

இந்த சுலோகத்திலே பகவான் பேசுகிற அழகை நன்றாக கவனிக்க வேண்டும்.

நம்மைப் பார்த்துச் சொல்கிறான்... அவன் வாஸ்தவத்தில் துரியோதனனைப் பார்த்துத் தான் பேசுகிறான்- ஆனால் அது நமக்குச் சொல்லப்பட்டதாகவே நாம் வைத்துக் கொள்ள வேண்டும்.

உன்னால் முடிந்தால் பாகவதோத்தமர்கள் வீட்டிலே போய்ச் சாப்பிடு. அவர்கள் உண்ட சேஷத்தை நீ ஸ்வீகரி... அதனால் நல்லபுத்தி உனக்கு வரும். ஒரு வேளை அது முடிய வில்லையென்றால் வடதேச யாத்திரை பண்ணி, கங்கையிலே போய் ஸ்நானம் பண்ணிவிட்டு வா. அதுவும் முடியாது போனால், இருக்கிற இடத்திலே இருந்து கொண்டே அந்த விஷ்ணுவின் திருவடியை நினை.

விஷ்ணு 'பதம்' என்பதற்கு திருவடி என்று ஒரு அர்த்தம்; திருநாமம்-சொல்- அதாவது விஷ்ணு என்கிற சொல் என்று ஓர் அர்த்தம்; விஷ்ணு இருக்கிற வைகுண்ட பதவி என்றும் ஓர் அர்த்தம். மூன் றையும் நினை என்கிறது பகவானின் வாக்கு.

'இதெல்லாம் இல்லையா...? ஏகாதசி விரதத்தையாவது இரு! மாசத்தில் இரண்டு ஏகாதசி வருகிறது... அதிலே ***சுக்ல பக்ஷ ஏகாதசி அன்று கட்டாயமாக உபவாஸம் இரு! அந்த மாதிரி உபவாஸம் இருந்து எனது அனுக்கிரஹத்தை சம்பாதித்துக் கொள்' என்கிறான் பகவான்.

பாகவதோத்தமர் வீட்டுக்குத் தேடிப் போவது இந்த நாளில் சுலபமான காரியமா..? அதே போல் கங்கையில் போய் நீராடுவதும் எல்லோருக்கும் ஆகக் கூடியது அல்ல... வெகுதூரப் பிரயாணம்; வசதிகள் இருந்தாலும் இருக்கிற இடத்தை விட்டு வெளியே போக வேண்டுமே! 'ஏகாதசி விரதம் இரு' என்றாலும் சிரமம்தான். நித்தியம் சாப்பிட்டே பழகியவர் களுக்கு முடியுமா..? அப்படியே முயற்சி செய்தாலும் அன்றைக்குப் பார்த்து சீக்கிரம் பசிக்கும்படி செய்வான் பகவான்! மகான்கள் வேண்டுமானால் உபவாஸம் இருக்கலாம். சாமானியர்களால் முடியாது.

உட்கார்ந்த இடத்திலேயே ஓம் விச் வாஸ்யை நம: ஓம் விஷ்ணவே நம: என்று சொல்வதிலே ஏதாவது கஷ்டம் உண்டா..? எதுவுமே இல்லை! இதைச் செய்வதாலே மற்ற மூன்றையும் செய்கிற பலனும் சேர்ந்து கிடைத் துப் போகும்.

அத்தனை பலனும் விஷ்ணு பத தியானத் தினாலே கிடைக்கிறது என்பது இந்த சுலோ கத்தினுடைய சாரதமமான விஷயம். அதை வெளிப்படுத்துகிற பகவான், துரியோதன னுக்கு ஒரு விஷயத்தை சூட்சுமமாக உணர்த் துகிறான்...

(தொடரும்)

*** வளர் பிறையில் வருவது

"**பை**யன் பேரு இன்னாம்மா?"

கண்ணீர்க் கடலில் முழுகி இருந்த ரங்கம்மா நிமிர்ந்தாள். தூய வெள்ளை உடையில் நர்ஸ்.

"பேரு... பேரு..."

ரங்கம்மா வாய் குளறித் தடுமாறவும், "சரிதான். பையன் பேரே நெனப்பு இல்லையா?" என்று சிடுசிடுத்தாள் நர்ஸ்.

"சொல்றேம்மா. கோவாலு. ராசகோபாலன்."

சொல்லிவிட்டுத் தயங்கியபடியே, "என் பையன் இப்ப எப்படி இருக்கான், நரசம்மா? பொழச்சுக்குவானா?" என்னும் போதே கண்ணீர் வெள்ளமாய்ப் பெருகியது.

"சும்மா அழுவாதே, பெரிம்மா. சாமியை வேண்டிக்கோ. இன்னும் நாற்பத்தியெட்டு மணி நேரம் போனாத் தான் எதுவும் சொல்ல முடியும். வெலாசம் சொல்லுங்க."

அவசரமாகக் கேட்டு எழுதிக் கொண்டு போய் விட்டாள் நர்ஸ்.

பேர் என்ன? அவளுக்கு மட்டும்தான் அவன் கோவாலு.

மற்றவர்களுக்கு?

பெரியவனுக்கு 'ஜடம்.' சின்னவனுக்கு 'உதவாக்கரை'. பெரியண்ணிக்கு 'தண்டச் சோறு', சின்னவளுக்கு 'ரெண்டுங்கெட்டான்'. ஊராருக்கு 'ரெட்டை மண்டை', 'நொண்டி' இன்னும் எத்தனையோ....

கோவாலுவை யாரும் அந்தப் பேர் சொல்லிக் கூப்பிட்டதே இல்லை. ஏன் அவளே, 'ராசா, செல்லம், கண்ணா' என்றுதான் கூப்பிடுவாள். பத்து மாதம் சுமந்து பெற்றதுடன், அவனைத் தன் நெஞ்சில் அல்லவா சுமந்து கொண்டு இருந்தாள்?

இவனைப் படைக்கும்போது பிரம்மனுக்கு என்ன சலிப்போ? கைக்கு வந்தபடி மனம் போன போக்கில் மண்ணை அள்ளி அப்பியிருக்க வேண்டும்.

ரெட்டை மண்டை – முன்பக்கம் நீண்டு புடைத்த நெற்றி. அதன் கீழ் உள்ளே தள்ளி, குகையில் நிற்பது போல் துருத்திக் கொண்ட கண்கள். பெரிய மூக்கு (வாணக் கொழாய் மாதிரினு கூடப் படிக்கிற பசங்க கேலி செய்யறதா அழுவான்.)

கோணிப் போன வாய் – முறம் மாதிரி விரிந்த காது. உடலுக்குப் பொருந்தாத தலை. அம்மை வடு முகம். சூம்பிப் போன கையும், காலும். விஷ ஜுரம் வந்ததில் அப்படி ஆகிவிட்டது. காலை இழுத்து இழுத்து நடப்பான். 'சப்பாணினு ஸ்கூலில் பசங்க கேலி பண்றாங்க'னு எட்டாவதோடு நிறுத்தி விட்டான்.

படிச்ச வரையிலே, கடை சாமான் வாங்க, ரூபா கொடுத்து சில்லறை வாங்கத் தெரியும். பால் கணக்கு எழுதி, கணக்குப் பார்த்துப் பணம் கொடுக்கத் தெரியும். நிலபுலன் இருந்தது. விவசாயத்தில் அப்பாவுக்கு மிஞ்சி எல்லாம் அத்துபடி. இது போதாதா?

ஸ்கூலில் பசங்க கேலி பண்ணினாங்கனு, விட்டுட்டு வந்துட்டான். வீட்டிலே உள்ளவங்களே பேசினா? சமயத்துலே அப்பாவும் சேர்ந்து பேசுவாரு!



# கோவாலு

கோதா பார்த்தசாரதி

அப்பா வழியிலே எல்லாரும் நல்ல நிறம். அழகு. மத்த பசங்க அப்படியே தன்னைக் கொண்டு பிறந்திருப்பதில் தனி கர்வம், பெருமை.

ஒரு பலவீனமான தருணத்தில் கோவாலு பிறந்ததோடு, இப்படி இருப்பதில் அவருக்கு ரொம்ப வேதனை. அஞ்சாவது குழந்தை வேண்டாம்னு அவர் வாங்கித் தந்த மருந்தினால்தான் கோவாலு இப்படி ஆகிவிட்டதாக ரங்கம்மா சொல்லுவாள்.

கோவாலுக்கு அண்ணன்மாரிடம் அவ்வளவு பிரியம். ஆனால் அவர்கள் இவனை வெறுத்து ஒதுக்கினார்கள் - கால் சரியில்லாததால் எதிலும் ரொம்ப நிதானம். கையிலுள்ள பொருளை வீசியெறிந்து, 'சீக்கிரம் போய் எடுத்து வா!' என்று விரட்டுவார்கள்.

அவன் இழுத்து இழுத்து நடப்பதைக் கண்டு 'ஹோ' என்று சிரிப்பார்கள். பெற்ற வயிறு பற்றி எரியும்.

"போங்கடா - போக்கத்த பசங்களா - இனிமே யாராவது அவனைச் சீண்டினா, பொல்லாதவளாயிடுவேன் - நீ வாடா, ராசா!" என்று அவன் கண்களைத் துடைத்து, அணைத்துக் கொள்வாள். அம்மையிலும், விஷ ஜுரத்திலும் கோவாலுவோடு பட்ட பாடு அவளுக்கல்லவா தெரியும்!

வளர, வளர அண்ணன்மார் அப்படி அலட்சியப் படுத்தும் போது அடக்க முடியாத வெறி அவனுள் எழ, கையில் கிடைத்தை எடுத்து வீசவும் உடைக்கவும் ஆரம்பித்தான். அதற்காகவே மேலும் அவனைச் சீண்டி அழவைப்பதில் அவர்களுக்கு ஆனந்தம்.

''அம்மா - உன் அருமருந்தப் புள்ளக்கி மூளையும் லூசாயிட்டாப்புல - இனிமே ரூமுலே போட்டு, பூட்டித்தான் வைக்கணும்...''

"எலே வேண்டாம்டா. அவன் பாவத்தைக் கொட்டிக்காதீங்கடா. நீங்க இல்லாத போது நல்லாத்தான் இருக்கான். பிரியமா பேசுங்கடா!"

பெரியவனெல்லாம் நல்லாப் படிக்கிறான்னு, கடனை வாங்கிப் படிக்க வைத்தார் ரங்கசாமி. ஹாஸ்டலுக்கும் படிப்புக்குமா ஏகச் செலவு. பெண்களுக்கும் நல்ல இடத்தில் கல்யாணமாகி நன்றாக இருக்கிறார்கள் -



அண்ணன்மார் போல சீண்டி அழவிடாவிட்டாலும், தங்கள் கல்யாணம் தாமதமானதற்கு அவனைக் காரணமாய் எண்ணி வெறுப்புத்தான்.

திடீரென்று ஒருநாள் ரங்கசாமி போன பிறகுதான், உண்மை நிலை புரிந்தது ரங்கம்மாவுக்கு. பையன்கள், படிப்பு, கல்யாணம் என்று வீடு, நிலம் எல்லாமே கடனில் இருந்தன. கோவாலுவுக்கென்று அவர் எதுவுமே ஒதுக்கவில்லை என்பது அப்போது தான் தெரிந்தது.

'மற்ற பிள்ளைகள் நன்றாக இருப்பதால், அவசியம் இல்லை - கூடப் பிறந்தவங்க கவனிச்சுப்பாங்க'ன்னு நெனைச்சாரா? அல்லது கடைசி வரை பிடிக்காமலே வஞ்சம் தீர்த்திட்டாரா? பாவி மக. நல்லா இருக்கும் போது அவரிட்ட பேசி ஒரு வழி பண்ணாம விட்டோமே!' என வருந்தினாள்.

வீட்டையும் நிலத்தையும் விற்று, கடன் போக மீதியை நாலு பேரும் பங்கு பிரித்துக் கொண்டனர்.

"மொத்தப் பணமும் உங்க படிப்புக்கும் கல்யாணத்துக்கும் போச்சு. மிச்சத்தையாவது கோவாலு பேரிலே எழுதி வைங்கப்பா!" என்று கெஞ்சினாள்.

"அந்த ரெண்டுங்கெட்டான் பயலுக்கு ஏம்மா தனியா சொத்து? நாங்கள்லாம் இல்லையா, அவனைப் பார்த்துக்க மாட்டமா?"

"தொலையட்டும். கிராமத்துல மழை இல்லாம, தண்ணி இல்லாம எப்பவும் பஞ்சம். ஊரே காலி. நெலத்தையெல்லாம் கூறு போட்டு வீடு கட்றான். வீட்டையும் வித்தாச்சு. பசங்க நல்லா சம்பாதிக்கறாங்க. பம்பாய் ஆறு மாதம், கல்கத்தா ஆறு மாதம்னு காலத்தை ஓட்டினாப் போச்சு."

மனசைத் தேற்றிக் கொண்டாள் ரங்கம்மா.

அன்று இரவு. விடிந்ததும் எல்லாரும் கிளம்ப வேண்டும்.

"இன்னும் ரெண்டு மாசம், வீட்டை வாங்கியவரிடம் டயம் கேட்டிருக்கேன். உன்னைத் தொந்தரவு பண்ண மாட்டார். நான் அதுக்குள்ள வந்து இந்தப் பயலுக்கு ஒரு ஆஸ்ரமத்துலே ஏற்பாடு பண்ணியிருக்கேன். அவனை அங்கே சேர்த்துட்டு உன்னை அழைச்சிண்டு போறேன்" என்றான் பெரியவன்.

"ஆமாம்மா. பம்பாயிலேல்லாம் குடியிருக்க இடமே கஷ்டம். குவார்ட்டர்ஸ் கொடுத்திருக்காங்க. நம்ம மாட்டுக் கொட்டா கூட பெரிசா இருக்கும். அதுல இவனைக் கொண்டு போய் எங்கே வெச்சுக்க?" என்றான் அடுத்தவன்.

"தம்பியை நான் கூட கொண்டு வெச்சுப்பேன். அத்தை, மாமாவும் எங்களோட தானே இருக்காங்க? அம்மா, அண்ணன்மார் இருக்கச்சே, தம்பியை நான் கொண்டு வச்சிட்டா அசிங்கமில்லே?"



## அருள்வாக்கு

தன் குழந்தையிடம் உள்ள அபிமானம் பக்கத்து வீட்டுக் குழந்தையிடம் இவனுக்கு இல்லை. 'எனது எனது' என்று இந்தக் குழந்தையிடமே அலாதி வாஞ்சை காட்டிப் பூரித்துப் போகிறான். எல்லாக் குழந்தைகளிடமும் இவனுக்கு ஒரே மாதிரியான அபிமானம் இருந்தால் இந்தக் குழந்தையைப் பார்த்துப் பார்த்துக் குளிப்பாட்டி, உணவூட்டி, தூங்க வைத்து, அதற்காகவே உடல், பொருள், ஆவியைச் செலவு செய்து வளர்ப்பானா? அந்தக் குழந்தை வளர வேண்டும் என்பதற்காகவே அதனிடத்தில் இவனுக்கு விசேஷ அபிமானம் உண்டாகச் செய்திருக்கிறாள் அம்பாள்.

ஒரு சரீரம் பிறந்து வளர்வதற்காக இவனிடம் காமத்தை வைத்து, பிறகு வாத்ஸல்யத்தைத் தந்திருக்கிறாள் அம்பாள்.

பெரிய பெண் நழுவிக் கொண்டாள்.

"உன் மருமகப்புள்ள, அமெரிக்கா போகணும்கிறாரு. ஆபீசிலே அனுப்பறாங்களாம். நா இப்போ போக முடியாது. வீடு, வாசலை வித்துப்போட்டு நீயும் கிளம்பிட்டா, நானே எங்கே போறதுன்னு யோசனை..." - சின்னவள்.

"மாசா மாசம் பணம் அனுப்பினா, அங்கே நல்லா பார்த்துப்பாங்க. பெத்த கடனுக்கு இத்தனை நான் செஞ்சது போறும். இன்னும் எத்தினி நாளக்கி உன்னால் முடியும்?" முடித்து விட்டான் பெரியவன்.

பெட்டியில் வைப்பதற்காக எடுத்த கோவாலுவின் புதுச்சட்டை ரங்கம்மாவின் கண்ணீரில் நனைந்தது. எதுவுமே தெரியாமல் வாசலில் விளையாடும் சிறுவர்களைப் பார்த்தபடி அப்பாவியாக உட்கார்ந்திருந்தான் கோவாலு.

நள்ளிரவில் தூக்கம் பிடிக்காமல் புரண்ட போது, கூடத்தில் கசமுச என்று பேச்சுக் குரல்.

"பாவம், தம்பியைக் கூட்டிட்டுப் போக

இவனுடைய சரீரம் வளருவதற்காகவே இவனுக்கு ருசி, பசி முதலியனவற்றை அம்பாள் வைத்திருக்கிறாள். 'சரி, இப்படி இவன் வாழ்வதாலோ, இவனால் இன்னொரு ஜீவன் பிறந்து வளர்வதாலோ என்ன பிரயோஜனம்? பழைய கர்மத்தை அநுபவிப்பது தவிர இதில் என்ன பயன்? இவனும் ஆத்ம க்ஷேமம் அடையக் காணோம். இவனுக்குப் பிறக்கிற ஜீவனும் ஆத்ம க்ஷேமத்தை அடையக் காணோம். பொதுவாக நாம் பார்க்கிற எல்லா ஜன்மாவும் வீணாகத் தானே போகின்றன? காம, க்ரோத, லோப, மோக, மத, மாத்சரியங்களை அதிகப்படுத்திப் பாபத்தைப் பெருக்கிக் கொள்வதாகத்தானே ஆகிறது! கர்மத்தைக் கழித்துக் கொண்டு மோக்ஷத்துக்குப் போகிறவர்களாகக் கோடியில் ஒருத்தர் கூடத் தோன்றக் காணோமே!' என்று சந்தேகம் வரலாம்.

இப்படி சந்தேகப்பட வேண்டாம். ஒரு மாமரத்தில் நிறையப் பழங்கள் உண்டாகின்றன. பழம் உண்டாவதன் பயன் அதன் கொட்டையிலிருந்து மீண்டும் மரம் தோன்றுவதற்குத்தான். ஆனால் ஒவ்வொரு மாமரத்திலும் உண்டாகிற அத்தனைப் பழங்களில் உள்ள வித்துக்களும் மரமானால் உலகிலே வேறெதற்குமே இடம் இராதே! ஒரு மரத்தில் உள்ள நூற்றுக்கணக்கான பழங்களில் ஒரே ஒரு வித்து மரமானால் நாம் திருப்திப்படவில்லையா? பாக்கியெல்லாம் வியர்த்தமாயிற்றே என்றா வருத்தப்படுகிறோம்?

அப்படித்தான் லட்சக்கணக்கில், கோடிக் கணக்கில் நாம் இத்தனை பேரும் ஆத்ம க்ஷேமம் பெறாமல் வீணாகப் போனாலும் பரவாயில்லை. நம்மில் யாராவது ஓர் ஆத்மா பூரணத்வம் பெற்று விட்டால் போதும். சிருஷ்டியின் பயன் அதுவே! அந்த ஒரு பூரண ஆத்மா நம் அனைவருக்கும் சக்தி தரும். அப்படிக் கோடானு கோடி ஜீவர்களில் ஒன்று தோன்றவே இத்தனை காமமும், சஞ்சலமும், இன்ப துன்பமும் வைத்திருக்கிறது. நாம் இத்தனை பேரும் வாழ்வதன் பயனும் அந்த ஒருத்தன் தோன்றத்தான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

முடியாதுன்னதும், அம்மாவுக்கு அழுகையே வந்துடிச்சு!"

"பின்னே? ஆசையைப் பாரேன். இந்த அழகான புள்ளையைக் கூட்டிட்டு பம்பாய் போனா, நம்ம பிரஸ்டீஜ் என்னாறது? உங்க அண்ணனைப் பார்க்க அவங்க எம்.டி. மாதிரி எத்தனை மனுஷங்க வருவாங்க? திருஷ்டிப் பரிகாரம் மாதிரி, சீ!"

"வந்தா அவன் பாட்டில, போட்ட சோத்தைத் தின்னுட்டு, முடிஞ்ச வேலையைச் செஞ்சிட்டு கிடக்கறான். உனக்கும் உதவி தானே? யாருக்கும் ஒப்பிக்கணுமா கூடப் பிறந்தவன்னு? மாசா மாசம் ஆஸ்ரமத்துக்கு அனுப்பற பணம் மிஞ்சுமில்ல?"

"அதெல்லாம் வேணாம். பணத்துக்குப் பார்த்தா நம்ம கௌரவம் என்னாறது? வேலை செய்வானா இந்தச் சப்பாணி? அப்படியே செஞ்சாலும் உங்கம்மா செய்ய விடுவாங்களா? கண்ணே, ராசான்னு அவங்களே தம்பட்டம் அடிச்சிடுவாங்க?"

"அதானே. அம்மா வந்தா நமக்கும் உதவி. இங்கே இருந்தா அவங்களுக்கு வேறே அனுப்பணுமே? வேலைக்காரிய நிறுத்திட்டு அந்தப் பணத்தை, ஆசிரமத்துக்கு அனுப்பிடலாம். அம்மா இங்கே ஆறு மாசம், அங்கே ஆறு மாசம்னு இருக்கட்டும்!"

மூத்த மருமகள் பிரச்னைக்கு முடிவு கட்டி விட்டாள்.

ரங்கம்மாவின் வயிறு கொதித்தது. இவர்களெல்லாம் கோவாலு பிறந்த இதே வயிற்றில் பிறந்தவர்கள்தானா? நெஞ்சில் ஈரமில்லாமல் எப்படி இவர்களால் பேச முடிகிறது?

**ம**றுநாள் –

"அம்மா! அம்மா! – கையில் அடுத்த வீட்டுப் பேப்பருடன் கோவாலு ஓடி வந்தான்.

அவன் பேப்பரில் ஒரு பக்கத்தைப் பிரித்துக் காட்டினான்.

மனநலம் குன்றியவர்களைப் பராமரிக்கும் விடுதியின் விளம்பரம் அது. ஆயா வேலைக்கு ஆள் கேட்டிருந்தார்கள்.

"அம்மா – என்னை விட்டிட்டுப் போயிடாதம்மா. நாம ரெண்டு பேருமே அங்கே வேலை செய்யலாம். அவங்க நம்மை வெச்சுச் சோறு போட மாட்டாங்களா?"

"என் ராசா – நா உன்னை விட்டுற மாட்டேன்டா!"

ரங்கம்மா ஒரு தீர்மானத்துக்கு வந்தாள். அன்றே வீட்டைப் பூட்டி சாவியை வாங்கியவரிடம் ஒப்படைத்தாள்.

"பையனுக்கு சிநேகிதக்காரங்க பட்டணத்துலேயிருந்து பம்பாய் போறாங்களாம். பொண்ணு வூட்டுக்குப் போய், கொஞ்ச நாள் இருந்துட்டு அப்படியே அவங்களை ஏத்தி விடச் சொல்லி, பம்பாய் போறேன்" என்று சொல்லிக் கொண்டாள்.

KP

Premium

Coconut Oil

சுத்தமான தேங்காய் எண்ணெய்!




இப்போது
குறைந்த விலையில்
100, 200, 500
மற்றும் 1 லிட்டர்
பவுச் பேக்குகளில்







**K.P. Oil Mills**

N-2, Sudarsan Gardens, 102, Velachery Road,
Guindy, Chennai - 600 032. Ph: 2354668


எஞ்சியிருந்த நகை, பாத்திரங்களை விற்றுப் பணமாக்கிக் கொண்டு, டவுனிலுள்ள அந்த விடுதிக்குப் போய்ச் சேர்ந்தாள்.

"பையனை இங்கே சேர்க்கணுமாம்மா?" என்றார் அந்தப் பெரியவர்.

"ஆமாங்கய்யா. இந்த விளம்பரம் பாத்துத் தான் வந்தோம். இவன் என் பையன். ரெண்டு பேரும் முடிஞ்ச வேலையைச் செய்யறோம். சாப்பாடும் துணியும் கொடுத்தாப் போதும்."

"இங்கே இருக்கிறவங்கள்லாம் மனவளர்ச்சி குன்றியவர்கள். அவங்களைப் பார்த்துக்கற வேலைதான். தனியா பயிற்சி எதுவும் தேவையில்லை. நீ ஒரு அம்மா – அந்தத் தகுதியே போதும். நெறைய அன்பு, கொஞ்சம் பொறுமை, இதுதான் தேவை."

"அது ரெண்டும் நெறையவே இருக்கு, சாமீ!"

"கோவாலு அவனுக்குப் பிடிச்ச, முடிஞ்ச உதவிகளைச் செய்யட்டும். நம்ம ஸ்கூல்ல மேற்கொண்டு படிக்கட்டும்!"

ஆசிரமத்து வாழ்க்கை ஆறுதலாக இருந்தது. எல்லா வேலைகளையும் அன்புடன் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தாள் ரங்கம்மா. கோவாலுவுக்கு அங்கிருக்கும் எல்லாரும் தோழர்கள். கோவாலு இல்லாவிட்டால் எதுவுமே இல்லை என்பது போல், அவனுக்கு ஒரு முக்கியத்துவம் கொடுத்தார் பெரியவர்.

"கோவாலு – செடிங்களுக்கு தாகமாயிருக்காம். தண்ணி விடறியா?"

"கோவாலு! நீ வந்தாத்தான் புள்ளங்கள்ளாம் சாப்பிடுமாம். வரியா?"

அந்த அன்பிலும் குழந்தைகளின் தோழமையிலும் இருவரும் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தனர். அதற்கு ஒரு முடிவு வந்தது போல் –

அன்று ஏதோ வேலையாக வேனில் டவுனுக்கு வந்திருந்தார்கள். அவரவர் வேலைக்காக அவரவர் பிரிந்துவிட, கோவாலுவை வண்டியில் விட்டு விட்டு, சூப்பர்மார்க்கெட்டுக்குள் நுழைந்தாள் ரங்கம்மா.

"கோவாலு – பிளாட்பாரத்திலேயே விளையாடிக்க. அம்மா வந்தா குரல் கொடு. கண்ணை மூடிக்கறேன் கொஞ்சம். காலைலே நாலு மணிக்கு எழுந்தது. கண்ணைச் சுத்துது!"

கோவாலுவும் கீழே இறங்கி, புர்ரென்று வாயால் சத்தம் எழுப்பி, காலால் உதைத்து, ஹாண்டில்பாரைத் திருப்பி... என்று இல்லாத மோட்டார் பைக்கை கற்பனையாக கிளப்பிக் கொண்டிருந்தான்.

கண்ணெதிரே கட்டு மீறி வந்த ஒரு நிஜ மோட்டார் பைக், பிளாட்பாரத்தில் ஏறி, கோவாலுவைத் தூக்கி அலாக்காக சூப்பர் மார்க்கெட் வாசலில் வீசிற்று.



## நெருக்கடி தீர்க்க ஒரு கார்!

**கா**ர் நிறுத்தவே இடமில்லாமல் நெருக்கியடித்து நிறுத்த வேண்டிய இன்றையச் சூழ்நிலையில், பக்கவாட்டில் கார் கதவைத் திறக்கவே இடமில்லாமல் திணறுவது சகஜமான அனுபவம். எனவே பட்டனை அழுத்தினால்– மேல் நோக்கித் திறக்கும் கதவுகளுடன் கார்கள், ஐரோப்பாவில் வந்து விட்டன! ஒரே ஆள் அமர்ந்து ஓட்டக் கூடிய மின்சாரக் கார் இது.

– பாரீஸ் பார்த்தசாரதி

"அம்மா!" என்ற அவள் அலறலில் டிரைவர் கண்விழித்து ஓடினான். குரல் கோவாலுடையது மாதிரி இல்லை?

படியிறங்கிய ரெங்கம்மாவும் "கோவாலு!" என்றலறிக் கொண்டு ஓடி வர.... அப்படியே அள்ளிக் கொண்டு போய் அருகிலிருந்த ஆஸ்பத்திரியில்....

"**அ**ம்மா – கோவாலு அம்மா!"

தூக்கமா, விழிப்பா என்று தெரியாத நிலையில் உட்கார்ந்திருந்த ரங்கம்மா திடுக்கிட்டுக் கண் விழித்தாள்.

நர்ஸ்தான் எழுப்பிக் கொண்டிருந்தாள்.

"சீக்கிரம் வாங்க. டாக்டர் கூட்டிட்டு வரச் சொன்னார்!"

மனதைத் திடப்படுத்திக் கொண்டு நர்சைப் பின்தொடர்ந்தாள். டாக்டர்கள் எல்லாரும் ஓர் அறையில் கூடியிருந்தார்கள்.

"டாக்டரய்யா. எம் புள்ள பொழைப்பானா?" – அழுதபடி கேட்டாள்.

"உட்காருங்கம்மா. மனசை தைரியப்படுத்திக்குங்க. உங்க பிள்ளை பிழைக்கவே வழியில்லை. ஆனா அவன் பேர் நீண்ட காலம் விளங்க ஒரு வழி இருக்கு."

"அய்யா என்ன சொல்றீங்க?" – பதறினாள் ரங்கம்மா.

"தலையிலே நல்லா அடிபட்டிருக்கு. இதை நாங்க மூளைச்சாவுன்னு சொல்வோம். இப்ப மற்ற உறுப்புகள் – கண் – இதயம் – கிட்னி மாதிரி நல்லா ஓடிட்டிருக்கு. கொஞ்சம், கொஞ்சமா அதுவும் அடங்கி, எப்படியும் சாகப் போற உங்க மகனிடமிருந்து உங்க அனுமதியோட, தேவைப்படற மூணு பேருக்குப் பொருத்தினா, அவங்க மூலம் உங்க மகன் நீண்ட காலம் வாழுவாம்மா!"

ஒருகணம் உலகமே இடிந்து விழுந்தது போல் திகைத்து நின்றாள்.

"கோவாலு – இனிமே பொழக்க மாட்டியா? எழுந்து உட்கார்ந்து 'அம்மா'னு கூப்பிட மாட்டியா?"

ஒரு நிமிஷம் கதறினாலும் மறுகணம் தெளிந்தாள்.

"கோவாலு! நீ சப்பாணி இல்லடா. சந்தனம். தான் தேஞ்சு பிறருக்கு வாசனை கொடுக்கற மாதிரி, நீயும் வாழணும்டா. எரிஞ்சு போகக் கூடாது."

"எம்புள்ளே உடம்புலே உருப்படியா எது இருந்தாலும், எடுத்து மத்தவங்களுக்குக் கொடுங்க டாக்டர். நா என்ன செய்யணும்?" என்று தெளிவாய்ப் பேசினாள் ரங்கம்மா.

"ரொம்ப நன்றிம்மா. இதோ இந்தப் பேப்பர்ல ஒரு கையெழுத்து..." என்று சுறுசுறுப்பானார் டாக்டர்.

**ப**ம்பாயில் பெரியவன் வீட்டில் டெலிபோன் அலறியது.

"அண்ணே... நம்ம சப்பாணி ஆக்சிடென்ட்டிலே மாட்டி, பிழைக்க மாட்டான்னதும் கண், ஹார்ட், கிட்னி மூணும் தானம் பண்ணிட்டாங்களாம். பேப்பர்ல பெரிசா நம்ம அம்மா போட்டோ, சப்பாணி போட்டோல்லாம் போட்டிருக்கான். ஏதோ ஆஸ்ரமத்து விலாசம் போட்டிருக்கு. இவங்க எப்போ அங்கே போனாங்க?"

"நீதான் பக்கத்துலேயே இருக்கே. என்னைக் கேக்கறியே. போய் விசாரி. ஏதும் பணம் வாங்கி இருப்பாங்களா, இல்லை ஏமாந்துட்டாங்களா? நானும் தம்பியும் இன்னும் ரெண்டு நாளில் லீவு எடுத்துண்டு வரோம்."

"சரிண்ணே. இன்னி ராத்திரி சன் டீவில அம்மாவைப் பேட்டி காண்றாங்களாம்.

பாருங்க. வெச்சிடவா?"

தங்கை போன் பண்ணியதை தம்பிக்குச் சொல்ல போனை எடுத்தான் பெரியவன்.

இரவு 7:30 மணி.

இரு குடும்பமும் அவரவர் வீட்டில் டீவியின் முன் அமர்ந்திருந்தனர்.

முந்தைய நிகழ்ச்சி முடிந்து இந்த நிகழ்ச்சி ஆரம்பிக்கும் போது காமிரா நிகழ்ச்சித் தொகுப்பாளரின் சிரித்த முகத்தைக் காட்டியது.

''இப்போ மத்தவங்களுக்காக இறந்து போன தன் மகனோட உறுப்புகளையே தானம் கொடுத்த, ஒரு தியாகத் தாயைப் பார்க்கப் போறோம்'' என்றதும் காமிரா சோகத்திலும் கம்பீரமான ரங்கம்மாவின் முகத்தைக் காட்டியது.

''வணக்கம்மா. உங்க மகனுடைய உறுப்புகளை தானமா கொடுத்ததில் உங்களுக்கு ஒண்ணும் வருத்தம் இல்லையே?''

"நானேதான் சந்தோஷமா கொடுத்தேன். இப்படிச் செய்யறதால, கஷ்டப்படற மூணு பேருக்கு உதவின மாதிரி இருக்கும்ன்னு டாக்டர் சொன்னார்."

"உங்களுக்கு இந்த மாதிரி தானம் பத்தி முன்னாடியே தெரியுமா? உங்களை யாரும் கட்டாயப்படுத்தலையே?"

"என்னை யாரும் கட்டாயப்படுத்தலய்யா. முன்னாடியே என் மகன் பேப்பர்ல இது மாதிரி செய்தியெல்லாம் வந்தா படிச்சுக் காட்டுவான். அப்ப, இது மாதிரி தானம் கொடுக்க நல்ல மனசு வேணும்ம்னு சொல்லுவான். அதனாலே சமயம் வந்த போது நான் அவன் ஆசையை நிறைவேத்தினேன்."

"இதுக்காகப் பணம் ஏதாவது...?"

''கடவுளே.. இல்லய்யா. வாங்கிட்டா அதுக்குப் பேர் தானம் இல்லய்யா. வியாபாரம்!''

''உங்க நல்ல மனசைப் பாராட்டறோம். இன்னொரு சங்கடமான கேள்வி. உங்கள் மகன் உடம்பில் ஏதோ ஊனம் என்று...''

"ஊனம் உடம்புலே இருந்தா என்ன? மனசுலேதான் இருக்கப்படாதுய்யா. எங்கிட்ட பணம் இல்லாட்டியும் நல்ல மனசு இருந்ததுய்யா!''

பின்னணியில் தத்தித் தத்தி நடந்து ஆஸ்ரமத்துச் செடிகளுக்கு நீர் ஊற்றும் கோவாலுவின் படம். விபத்து பற்றி விசாரித்த பின்னர்,

''அம்மா கடைசியா ஒரு கேள்வி! உங்களுக்கு கோவாலு ஒரு மகன் தானா? வேறு பிள்ளைகள் இருக்கிறார்களா?''

ரங்கம்மா விரக்தியாகச் சிரித்தாள்.

''கோவாலு மட்டும்தாங்க. நான் இப்ப அனாதை!''

டீ.வி. பெட்டியினின்றும் ரங்கம்மாவின் கரம் நீண்டு, பளீர் என்று முகத்தில் அறைந்தது போல் அவள் குடும்பத்தினர் திகைத்தனர். மேலே பேட்டியில் பேசியது எதுவுமே அவர்களுக்குக் கேட்கவில்லை.

## இவரும் ஒரு முதல் பெண்மணி!

பெண்கள் ஆட்டோ ஓட்டுகிறார்கள். ராக்கெட்டில் பயணிக்கிறார்கள். மிலிட்டரியில் பணிபுரிகிறார்கள். ஆனால் வான் முட்ட உயர்ந்து நிற்கும் கோபுரத்தின் உச்சி சாரத்தில் அமர்ந்து வர்ணம் தீட்டும் பெண்களைப் பார்த்திருக்கிறீர்களா?

''கடந்த இருபத்தைந்து வருடங்களாய் இத்தொழிலில் ஈடுபட்டிருக்கும் நானே பார்த்ததில்லை...!'' என்கிறார் திருமதி ராஜம்மா சுந்தரம். வயது 55. ஊர் கோவை கவுண்டம்பாளையம். கணவர் நோய்வாய்ப்பட்ட இக்கட்டான சூழலில் கைக்குழந்தைகளுடன் இத்தொழிலுக்கு வந்த இவர், இப்போது தமது கணவரையும் இத்தொழிலில் ஈடுபடுத்தி விட்டார்!

பொள்ளாச்சி ஆவுலம்பட்டி (ஏரியா பெரியது என்று கூறினார்) கோயில் உட்பட நூற்றுக்கணக்கான திருப்பணிகளை முன்னின்று செவ்வனே முடித்திருக்கும் அனுபவம் காரணமாக, ஒரு கோபுரத்திற்குத் தேவைப்படும் வர்ண அளவுகள், வேலை முடிக்கத் தேவையான அவகாசம் போன்ற புள்ளி விவரங்களை நாக்கு நுனியில் வைத்திருக்கிறார்.



''கணக்குப் பார்த்தால் ஒரு நாளைக்கு 100 – 120 ரூபாய் வரை தான் கூலியாகக் கிடைக்கும். இருந்தாலும் கடவுளுக்குத் தொண்டு செய்கிறோம் என்கிற திருப்தி இருக்கிறதே.... அது தரும் மனநிறைவுக்கு ஈடேது?'' என்கிறார் ராஜம்மா.

படம், சந்திப்பு : கா.சு. வேலாயுதன்

# பிரமிக்க வைத்த பிந்துக்கள்!

✉ 'காட்டுக்குப் போன எதிராசன்' கதையைப் படித்து, கண்ணில் நீர் (ஆனந்தக் கண்ணீர்தான்; பயப்பட வேண்டாம்) பெருக, வயிறு குலுங்கக் குலுங்க சிரித்தோம்!
திருச்சி-17, உஷா முத்துராமன்.

✉ காந்தியின் மீது உயிரை வைத்து, அவருடைய கொள்கைக்காகவே வாழ்ந்து கொண்டிருக்கும், பணத்தைப் பெரிதென மதிக்காத சென்ற தலைமுறைக்கும், பணத்தையே பிரதானமாக நினைத்து, அதற்காக உயிருக்கு உயிரானவர்களைக்கூட ஏமாற்றலாம் என நினைக்கும் இளையதலைமுறைக்கும் உள்ள வித்தியாசத்தை எண்ணி பெருமூச்சு விட வைத்தது 'காந்தி தேசம்' சிறுகதை.
திருப்பரங்குன்றம்,
டி.கே. சுப்பிரமணியன்.

✉ 'குஜ்ரால் இந்தியா வருகிறார்!' ப்ரியனின் கற்பனை உரையாடல் சிரித்துச் சிரித்து வயிற்றைப் பதம் பார்த்து விட்டது!
அரசரடி, நெல்லை வி. சிவா.

✉ பிரபஞ்சனின் மூன்று பிந்துக்களும் பிரமிக்க வைத்து விட்டனர்!
நெய்வேலி-3, இந்துமதி.

✉ மனப்பக்குவம் ஏற்பட... பொறாமை என்னும் வக்கிரத்தைத் தவிர்க்க, அடிமனம் பண்பட, உணர்வுகள் - உறவுகள் தொடர் பாலமாக அமைந்துள்ளது. பாராட்டுக்கள்.
வலையப்பட்டி,
எம். பாலசுப்பிரமணியன்.

✉ வீரப்பனைப் பிடிக்கிறாரோ, இல்லையோ பேட்டியில் எங்களைக் கவர்ந்து விட்டார் காளிமுத்து...!!
திருச்சி-14, ராஜி ராதா.

✉ ஆர்ப்பாட்ட (V) அழகிகள் அட்டைப்படக் கட்டுரை பிரமாதம். வீடியோ ஜாக்கிக்கு, "வீ" - என்றால் வீரப்பனும் இல்லை. "ஜெ" என்றால் ஜெயலலிதாவுமில்லை என்ற உமது குறும்புத்தனத்தை விரும்பி ரசித்தோம்.
பெங்களூர்-47,
மு. புஷ்பராசன்.

✉ கோடை இடியின் சிரிப்புப் பேய் மழையை, "சிரிப்புச் சாரல்" என்று சொல்ல உங்களுக்கு எப்படித்தான் மனசு வந்ததோ! சமீபத்தில் பெய்த புயல் மழையில் தமிழகம் மூழ்கியதோ இல்லையோ... கல்கி பொழிந்த சிரிப்பு மழையில் நாங்கள் முழுக்க நனைந்து விட்டோம்.
பெங்களூர்-16, அ. சங்கரன்.

✉ ரபி பெர்னார்ட்டின் செய்தி அறிக்கையைக் கேட்பதற்காகவே தினமும் வேரித்தாஸ் வானொலி வைப்பேன். ஆனால் ம.அ. சாமியின் மகன்தான் ரபி பெர்னார்ட் என்ற விஷயம் உங்கள் எழுத்தாணியின் எழுத்தில்தான் தெரிந்து கொண்டேன்.
கரடி கொல்பட்டி,
கே.எம். கவிட் முருகன்.

✉ சரியான சீஸனில் அனுபவமில்லாத மற்றும் மறந்து போயிருக்கும் அனைவருக்கும் உபயோகமாகும் விதத்தில் மழையை சமாளிக்க நீர் வழங்கிய டிப்ஸ் உமது வழக்கமான குறு(சு)ம்புத் தனங்களோடு கூடிய பயனுள்ள நியூஸ்களாகவே இருந்தமைக்கு ஸ்பெஷல் தாங்க்ஸ்...!"
கும்பகோணம்,
ஆர். ஷண்முகம்.

✉ ரணதுங்கா பேட்டியில், (9.11.97 இதழ்) யார்ட்லிக்கு முன்னால் கோச்சாக இருந்தவர் உல்மர் என்று எழுதியுள்ளீர்கள். இது தவறு. அவருக்கு முன்னால் கோச்சாக இருந்தவர் வாட்மோர். உல்மர் தென்ஆப்ரிக்காவின் கோச். ரணதுங்காவுக்கு இது எப்படி, தெரியாமல் போச்சு?
சென்னை-47,
எஸ். ராமச்சந்திரன்.

(பாவம், அவரை ஏன் தப்பு சொல்றீங்க. அவர் சரியாத்தான் சொன்னார். அவசரத்துல சொதப்பிட்டது நம்மாளுதான். ஸாரி! - ஆர்)

✉ "நக்கீரன் கோபால் நாடகம் ஆடுகிறார்" என்ற அவப்பேச்சிற்கு சவுக்கடி கொடுக்கும் வகையில் உண்மையைத் தோலுரித்துக் காட்டிய பரப்பான தொடர் சார் இது.
மேலகிருஷ்ணன்
புதூர், பிரபாலிங்கேஷ்.

✉ "மீசைக்காரரின் மினி தொடர் நரம்புகளில் தந்த மெகா அதிர்வு அலைகள் அடங்க ரொம்ம்ப நாளாகும்."
வேலூர்-4, மலை அரசன்.

✉ வாராவாரம் திகில், மர்மம் இவைகளுடன் சென்றுக் கொண்டிருந்த "வீரப்பனும் நானும்" என்ற கோபாலின் கட்டுரைத் தொடர் முற்றுப் பெற்று விட்டதே. இனி இப்படி ஒரு தொடரை நமக்கு யார் தரப் போறார்கள்?
தக்கோலம், அ. முஸ்தபா.

✉ வாரம் தவறாமல் திடுக்கிடும் திருப்பங்களைக் கொடுத்து, எங்களை ஆட்கொண்டு விட்டார் 'நக்கீரன்' கோபால்! சில நேரங்களில் உண்மை, கற்பனையைவிட நம்ப முடியாததாக இருக்கும் என்பார்கள்! உண்மையே!
வேலூர்-6,
எம். கோபாலகிருஷ்ணன்.



"கீழத் தெரு சந்திரகாக வல்லி யாப்பா?" தலைவர் கேட்டார்.

"சந்திரகாக சந்திர காக..." யாரோ பின் பக்கம் திரும்பி உரக்க அழைத்தார்கள்.

"ப்ச்... என்னப்பாது.. என் வூட்டு சடங்குக்கா கூப்ட்ருக்கேன். ஊர்ப் பொதுக் காரியம். சாமி சமாசாரம். மண்ணாங் கட்டிய உட்டு ஒவ்வொரு வூடா ஏறி எறங்கச் சொல்லியிருக்கேன். ஆனக் காணவே அர நாளானா என்னிக்கி வரவு செலவ முடிக்கறது?"

"அய்யா!" சந்திரகாக வந்து நின்றான்.

"என்னப்பா... கலெட்டராட்டம் வரே... ஆள் வரதே இப் படி இருந்தா ஒங்கிட்டேந்து காசு வரது எப்பிடி... கணக்கப் பிள்ளை, படிங்க..."

கணக்குப்பிள்ளை என்பவர் யாரோ ஒரு மிராசுதாருக்கு எப்போதோ இருந்தவர். பெருங்காயப் பாண்டம்; பழைய பேர் மட்டும் இன்னும் அழைப்பதற்கு...

"போன வருச பாக்கியே அறுவத்து நாலு ரூபா... இப்ப நானூத்துப் பன்னண்டு... ஆகக் கூடி..."

"என்னது போன வருசமா... அதான் கிச்சான் கைல குடுத்து அனுப்சனே அப்பியே..."

கிச்சான் பெயரை உச்சரித்ததும் கூட்டத்தில் சிரிப்பு எழுந்து அமர்ந்தது...

"இது சவுரியமான வழிடா. கிச்சான் செத்துப்பூட்டான். காந்தி கணக்கா...?"

"அவன் இருந்திருந்தாலும் கணக்கப் பிள்ளைட்டயா காசு வரும்... கருவேலப் பொதர்ல போதையாக் கரைஞ்சிருக்கும். சந்திரகாக கத்துக்கிட்டாண்டா டோய்..."

"ஷ்... செத்த சும்மாயிருங்களேம்ப்பா..." என்ற பெரியவரின் குரலுக்கு அமைதி மட்டுமே எதிரே நின்றது..

"ப்பா... கணக்கில் என்ன இருக்குன்றதுதான் இப்ப. அவன்கிட்ட குடுத்தேன். இவன் வாங்கிட்டுப் பூட்டான்னு கொழந்தப் புள்ளயாட்டம் சொல்லாதே. நேத்திக்கே யாவாரி தலைய ஒன் வீட்டுப் பக்கம் பாத்தேன். நாளைக்கி, ஓசந்தா நாளைன்னிக்கு பைசல் பண்ணிடு... ம் அடுத்தது.."

"பழனி மவன் குமரகுரு..."

"போன வாட்டி கச்சேரி வைக்கறேன்னு சொல்லிட்டு கடைசில சினிமா காட்டிட்டுப் பூட்டிங்க... கச்சேரி என்ன ஆச்சு.."

தலைவர் துடித்தார் "எலே. எலே. வெவரம் தெரியுமாடா? பாண்டிலேந்து ஒரு ஆனைப்

# பாக்கி

**சுப்ரமணியன் ரவிச்சந்திரன்**




புடிச்ச கச்சேரி ஏற்பாடு பண்ணப் போனேன். பதினஞ்சாயிரம் கேக்கறான். கையில எட்டு ருவாய்க்கே தாளம் போடுது..."

"திருவிழாவோட தெருவுக்கு ரெண்டு லைட்டும் போட்டுத் தர்றேன்னு போன வருசம் சொன்னீங்க.."

"யப்பா சந்திரகாசு, ஊருக்கு எல்லாம் செய்ய ஆசைதான். சட்டியில இருந்தாத்தான் வரும். ஒங்கப்பாரு குடும்பச் செலவக்கூட அப்புறமின்னுட்டு மொதல்ல பொதுக் காசை எடுத்துத் தந்துட்டுப் போவாரு. மொதல்ல ருவாயக் கட்டு. அப்புறம் கேள்வி, குறுக்கு விசாரணைல்லாம் பண்ணு..."

"அடுத்தது யாருப்பா?"

"எல்லக்கல் தெரு முனியப்பன்..."

முனியப்பன் என்பவன் பொதுவாய் சபைக்கு ஒரு கும்பிடு போட்டான்.

"அய்யா.. கோர்ட்டு கேசுன்னு எம் பொழப்ப விட்டுட்டு வக்கீல் பின்னாலயும், குமாஸ்தா பின்னாலயும் அலையறேன். எங்கிட்ட பத்து நயா பைசா கூட இல்ல..."

"என்ன பேச்சுடா பேசறே...ம். எதுக்கு கோர்ட்டும் கேசு..ம்?. டவுனுக்குப் போனா சும்மா வரவேண்டியதுதானே... அய்யாவுக்குப் பிராந்தி கேக்குது பிராந்தி... குடிச்ச பிறகு வம்புச் சண்டை. தானாக்காரன் தள்ளிக்கினு பூட்டான். ஒன் பேரும் ஊர்ப் பேரும் பேப்பர்ல போட்டு நாறிப் போச்சு. சரி போவட்டும்... அம்மாவுக்கு ஒழுங்கா பணத்தைக்கட்டு, ஒங் கஷ்டத்தையெல்லாம் தீத்துடுவா..."

அன்றைய பகல் பொழுது கிட்டத்தட்ட முடிந்து விட்டது கூட்டம் முடிய. சாப்பிடக் கூட இடைவெளி கிடையாது. இன்னும் பத்து நாட்களில் ஆண்டுத் திருவிழா வருகிறது. நிலத்துக்காரர்களின் வரியும், ஊரில் வசூலும்தான் திருவிழா, பொதுக் காரியத்திற்குப் பயன்படுத்துகிற வழி...

"சே. வர வர நிர்வாகம் பண்றதே உசிர வாங்கற வேலயாப் போயிடுச்சு... மூத்தவன், தலைவன்னு ஒரு மரியாதையே இல்ல. டவுன்ல வீடு கட்டத் தெரியும், வருசா வருசம் அக்கம் பக்கத்துல குழி குழியா வெல பேசத் தெரியும். தீவாளி பொங்கல், காதுகுத்து, மஞ்சத் தண்ணி, கருமாதி எல்லாத்துக்கும் ஆடு அடிக்கத் தெரியும்... அம்மா கோயிலுக்குன்னாத்தான் மழை இல்ல, வெள்ளம் போயிடுச்சு, பூச்சி புடுச்சது, கரிக்காவா போச்சுன்னு பஞ்சப்பாட்டு. வாக்கு சுத்தம் இல்லாதவன மழையும் காஞ்சு கெடுக்கும், இல்ல பேஞ்சும் கெடுக்கும்... தே.. எலையப் போடு."

தலைவர் வாயைக் கொப்பளிக்கும் போது மோட்டார் சைக்கிள் நிற்கும் படபட..

தலைகலைந்து தூசி படிந்ததால் குறுக்கிய முகத்துடன் அவர் இவரைக்கண்டு கும்பிடுகிறார்.

"ஒக்காருங்க... யாரு வேணும்?"

"இங்க மிஸ்டர் சச்சிதானந்தம்னு..?"

"ஆமா... நான்தான்.. நீங்க யாருன்னு?"

"நான் பேங்க்லேந்து வர்றேன். நீங்க எண்பத்தாறாம் வருஷம் வாங்கின லோன் அப்பிடியே நிக்குது, வட்டியும் அசலுமா.."

"என்னத்தை சார் செய்யறது... மூட்டை போட்டிருக்கேன். இன்னும் பத்து நாளுல வந்துடும்... ஜாடா எல்லாப் பணத்தையும் கட்டி நேர் பண்ணிடறேன்.."

"வருசா வருசம் இத்தையேதான் சொல்றீங்களாம்... கோர்ட்டுக்குப் போகாம முடிச்சுக்குங்க. இனிமே தாங்காது.."

"அதை ஏன் கேக்கறீங்க சார். மூணாம் வருசம் பாப்பாவுக்குக் கல்யாணம்... மாப்ள எங்கியோ தீவுல பெரிய வேலை. சுத்தமா ரெண்டு தோளு காலி... ஒடனே எங்கம்மா போனாங்க... பெரிய தலைக்கட்டு. இதைத் தவிர ஊர்ல ரெண்டு கோஷ்டியாப் போயி வெட்டு குத்து... ஓரமாப் போன என்னையும் ஒரு பக்கம் கோத்துட்டாங்க. ரைட்டர், இன்ஸ்பெக்டர்னு அதொரு பக்கம் செலவு... கவுரதயக் காப்பாத்தணும்னா காசப் பாக்க முடியுதா? பிச்சைக்காரன் வீட்டுக்கு சனீஸ்வரன் விருந்துக்கு வந்தாப்பல வெள்ளாமை போச்சு ரெண்டாம் வருசம். நஷ்ட ஈட்டுப் பணம் அஞ்சு ருவா வாங்க அம்பது ருவா செலவு பண்ணோம்.

"விவசாயின்னா கோர்ட்டுக்குப் போய்டுவேன்றீங்க... அவனவன் கோடி கோடியா பணம் வாங்கிட்டு சவுரியமா போறான். ஒங்க மாதிரி அதிகாரிங்களும் சலாம் போடறீங்க அவுங்களுக்கு... ஏழை பாழைங்களை அனுசரிச்சு என்னிக்குத்தான் சட்டம் வருமோ... ஒங்ககிட்ட என்ன... என்ன சாப்பிடறீங்க..."

"ஒண்ணும் வேணாம்... கொஞ்சம் பாத்துக் கட்டிடுங்க!" வந்தவர் முனகிக் கொண்டே போனார்...

"கட்டிட்டா போச்சு..." என்றபடி இலையில் அமர்ந்தார் தலைவர்.

# அமுதசுரபி

## பொன்விழா ஆண்டு - குறுநாவல் போட்டி

## 10 நாவல்கள் - மொத்தப் பரிசு ரூ.20,000

'அமுதசுரபி' - வெளியீட்டாளர்கள் பொன்விழா ஆண்டைச் சிறப்பாக நினைவுபடுத்தும் வகையில் குறுநாவல் போட்டியை அறிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறார்கள்.

**குறுநாவல் 'அமுதசுரபி' மாத இதழில் 32 பக்கங்களுக்குக் குறையாமல் அமையவேண்டும். ஏறத்தாழ முழு வெள்ளைத்தாளில் 120 பக்கங்கள் இருக்கலாம்.**

குறுநாவல், எழுதுபவரின் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும். தழுவல், தமிழாக்கமாக இருக்கக் கூடாது. மொழி வளம், நடைச் சிறப்புடன் தமிழ்ச் சமுதாய முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டு அமைதல் நல்லது. வரலாற்றுச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டும் எழுதலாம்.

**10 நாவல்கள் வெளியிடத் தேர்ந்தெடுக்கப்படும். ஒவ்வொரு நாவலுக்கும் ரூ.2,000 பரிசாக வழங்கப்படும்.**

10 நாவல்கள் பரிசுக்குத் தகுதியில்லாவிடில், தகுதியுள்ள நாவல்கள் மட்டும் தேர்ந்தெடுக்கப்படும். தேர்ந்தெடுக்கப்படாத குறுநாவல்களைத் திரும்பப் பெற போதிய தபால் தலைகள் இணைக்கப்பட வேண்டும்.

தேர்ந்தெடுக்கப்பட்ட குறுநாவல்கள் 'அமுதசுரபி' இதழில் ஒவ்வொன்றாக வெளிவரும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது. குறுநாவல்கள் 'அமுதசுரபி' அலுவலகத்திற்கு 31.1.98-க்குள் கிடைக்குமாறு அனுப்பி வைக்கவேண்டும்.



அனுப்ப வேண்டிய முகவரி:

அமுதசுரபி,

ஏ-7, இரண்டாவது அவென்யூ,

அண்ணாநகர் கிழக்கு, சென்னை - 600 102

# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

## குரு கூந்தல் தைலம்




### குரு உபயோகிப்பதன் மூலம்

- தலைமயிர் நீண்டு. கறுத்து. அடர்த்தியாய் வளரும்.
- தலைமயிர் உதிர்தல். செம்பட்டை நிறம். இளம் பித்த நரை. தலை அரிப்பு. பொடுகு. சொரிந்தால் செதில் உதிர்தல் குணமாகும்.
- ஆண்கள். பெண்கள் அனைவருக்கும் ஏற்றது.

இயற்கை தரும் அதி உன்னத மூலிகைகளால் சித்த மருத்துவ முறையில் தயாரிக்கப்பட்டது.

100ml பாட்டிலின் விலை ரூ. 34.50

**வியாபார விசாரணைகளுக்கு கீழ்காணும் முகவரிக்கு தொடர்பு கொள்ளவும்.**

விபரங்களுக்கு :



*Agasthiar Pharmaceuticals*

P. Box No. 588, Salem - 636 005.

**இப்போது எல்லா மளிகை, மருந்து மற்றும் ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.**

டிசம்பர் 1ஆம் தேதி எங்கும் கிடைக்கும்



பிருகு முனிவர் அருள் பெற்ற ஜோதிட பூஷணம்

**பாலஜோசியர் வித்வான் வே. லட்சுமணன் வழங்கும்**

## 1998 - இல் உங்கள் வாழ்க்கை எப்படி?

*(12 ராசிகளுக்கும் புத்தாண்டுப் பலன்கள் அடங்கிய நூல்)*

எல்லாப் பிரச்சனைகளுக்கும் தெளிவான விளக்கங்கள்!

அந்தந்த நேரத்தில் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகள்!

முறையான பரிகாரங்கள்!

கிரகங்களின் அடிப்படை மூலமந்திரங்கள்

● இத்தனையும் அடங்கிய முத்தான நூல் ●

**தனிப்பிரதி விலை ரூ.12/- தபால் செலவு இலவசம்!**

**தயாரிப்பு : கலைமாமணி விக்கிரமன்**

விற்பனையாளர்கள் தங்களுக்குத் தேவையான பிரதிகளுக்கு 25 சதவீதம் கமிஷன் கழித்துக் கொண்டு மீதம் தொகையுடன் ஆர்டர் உடனே அனுப்பவும்.

விவரங்களுக்கு :

**காமதேனு பப்ளிகேஷன்ஸ் லிட்,**

2, ஜயசங்கர் தெரு, மாம்பலம், சென்னை - 600 033.



# ஜெயின் கமிஷன் ரிப்போர்ட்!

- அம்பையும் விட்டுவிட்டு
எய்தவனையும் விட்டு விட்டு எழுதிய
'ஆயிரத்தொரு இரவுகள்' அராபியக் கதைகள்—
ஜெயின் கமிஷன் ரிப்போர்ட்.

- இராமனும் இராவணனும் கூட்டணி அமைத்ததால்
நிஜமாகவே ஜனநாயக சீதை, தீக்குளித்தாள்.
உத்தரப்பிரதேசம்.

- வாருங்கள் ஓட்டுப் போடுவோம்.
ஜெயித்துக் கொண்டே நீங்கள்
தோற்றுப்போகும் விளையாட்டு இது.

- ஜல்லி போட்டார்கள்; தார்போட்டார்கள்
அப்புறம் 'பில்' போட்டார்கள்.
ரோடு மட்டும் இன்னும் போடவேயில்லை.
பொதுப்பணித்துறை.

- கிழக்கு உதடுகளில் சன்னல் திறந்து
யார் முத்தம் தந்தது?
சூரியோதயம்.

- புத்தகங்களால் படகு விட்டு
கானல் நீர்ப் பயணம்
கல்லூரி வாழ்க்கை.

— ருத்ரா





# இனி வீரப்பனின் கதி..?

● ராசிவா, உடுமலை.

? மோசமானவர்களைத் தேர்ந்தெடுக்க நம் நாட்டில் தேர்தலுக்கு 482 கோடி ரூபாய் செலவழிக்கப்படுவது பற்றி...?

! இதைப் போய் பெரிசா சொல்லப் போயிட்டீங்களே; மக்களால் தேர்ந்தெடுக்கப் படாமலே முதல்வராகி லட்சக்கணக்கில் ஊழல் பண்ணிக் கொண்டிருக்கிறார் பீஹாரில் ரப்ரி தேவி. அதை என்னன்னது! முதல்வர் வீட்டுல மாட்டுத் தொழுவம், கோழிப் பண்ணை வைக்கறதுக்கும், மாடுங்களுக்கு குளுகுளு வசதி (ஏசி!) பொருத்தறதுக்கும் பதினாலு லட்சமாம்! வீட்டுக்கு சோபா, ரத்தினக் கம்பளம்னு வாங்கிப் போட்டதுல இன்னொரு பதினாறு லட்சமாம். அரசின் பிரதம கணக்காயர் சுட்டிக்காட்டியிருக்காரு... நாம வாயில விரலை வைச்சுக்கிட்டு முழிக்கிறோம்.

● ஆர். ஷம்மு, குடந்தை.

? இனி வீரப்பனின் கதி அந்தோ பரிதாபம் தானா...?

! 'வீர' மரணமா? சரணாகதியா? தண்டனையா? அடைக்கலமா...? உறுதியா சொல்ல முடியாதுங்க... ஆனால், பார்க்கறதுக்கு வீரப்பன் போல இருக்கற ஒருத்தரை வைச்சு மாணவரைக் கடத்திட்டுப் போகிற மாதிரி டீவி படம் பிடிக்கப் போக, அதனாலே சென்னையில பரவிய பீதி இருக்கே... சே! டீவிகாரங்களும் இப்படிப் பண்ண வேண்டாம்; மக்களும் இந்த மாதிரி அசட்டு பயங்களுக்கு ஆளாக வேண்டாம்!

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி.

? வை.கோ., ஜெ காலில் விழுந்து ஆசி வாங்கும் காட்சியைப் பத்திரிகையில் பார்த்து ஆனந்தமடையத் துடிக்கிறேன். எப்போது நிறைவேறும்...?

! 'காலில் விழுவது என்றால் சாஷ்டாங்கமாக விழுவதுதானா என்ன...?

● எஸ். நாராயணன், சென்னை – 92.

? வருமான வரி கட்டத் தவறியவர்களை சிறையில் அடைக்க வேண்டும் என ப. சிதம்பரம் சொல்கிறாரே?

! அடுத்த கேள்வி - பதிலைப் படியுங்களேன்...!

● ப. இராம் முருகன், சென்னை – 81.

? முன்னாள் நடிகையும் இன்றைய எம்.பியுமான ஜெயப்ரதா ஒன்றரைக் கோடி ரூபாய் வரி பாக்கி வைத்துள்ளாராமே, இது பற்றி...?

! ப. சிதம்பரம் தம்மால் செய்ய முடிந்ததை மட்டுமே சொல்வது நல்லது.

● நா. ஷேக் உசேன், செஞ்சி.

? 'வெஸ்டர்ன்'காரன் டஸ்ட்பின்னில் போடுவதைக் கொண்டு வந்து நம்மவர்கள் டியூன் போடுகிறார்கள் என்கிறாரே கே. ஜே. யேசுதாஸ்...?

! இதை நமக்கு யேசுதாஸ் சொல்ல வேண்டுமா என்ன...? 'வி' சானலையும் எம்டிவியையும் தொடர்ந்து பாருங்கள்; நம்மவர்கள் எதிலிருந்து எதைக் காப்பியடித்தார்கள் என்பது தெரியும். ஸ்டார் மூவிஸையும் TNT சானலையும் தொடர்ந்து பார்த்தால், பல சினிமா கதைகள் அங்கிருந்து திருடப்பட்டவைதான் என்பது புரியும்.

● பத்மினி பழனி, காட்பாடி.

? அவசர சமயத்தில் கழுத்தறுக்கும் நண்பர்களுக்குப் பாடம் கற்பிப்பது எப்படி...?

! அவர்களுக்கு அவசர சமயம் வரும்போது கழுத்தறுக்காமல் உதவுங்கள். அதுவே பாடம்! சொன்னது நானல்ல... இரண்டாயிரம் வருஷப் பழைய தாடிக்காரர்.

**நீங்கள் கேட்டவை — தராசு**

● சூர்ய நிலா, சேலம் – 2.
? டெண்டுல்கர் மீண்டும் கேப்டன்... ஜீரணிக்க முடிகிறதா...?
! ஏவ்! வேறு யார் இருக்காங்களாம்!?
● ஏ. சரவணன், அரசரடி.
? சி.பி.ஐ. இயக்குனர் சர்மா கீழே விழுந்ததில் சதிப் பின்னணி உள்ளது என கேசரி கூறியிருப்பது பற்றி...?
! அவர் ஏர்போர்ட்டுக்கு வந்த கார் பங்சர் ஆனது. அதையும் தாண்டி வரும்போது விமான ஏணி விலக, கீழே விழுந்தார்! அவரை ஸ்ட்ரெச்சரில் படுக்க வைக்க முயன்றபோது அதுவும் முறிந்தது. பிறகு ஆம்புலன்ஸில் ஏற்றிச் செல்கையில் அதுவும் டயர் பங்சராகித் தாமதமானது... ஒருவழியாக மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். இவ்வளவும் சதியா? தற்செயலா? துரதிருஷ்டமா? விதியா...? வியப்பாகத்தான் இருக்கிறது!
● கே. வி. சூர்யா, நல்லத்துக்குடி.
? நிறைவான வாழ்க்கை என்பது என்ன...?
! படுக்கையில் படுத்தவுடனே தூக்கம் வந்து விடுகிற வாழ்க்கை.
● ஆ. விச்சு, திருப்பத்தூர்.
? ரட்சகன், விடுகதை, ஆஹா... படங்கள் எப்படி...?
! முறையே ம்ஹூம்! ஆஹா! ஓஹோ... என்கிறார்கள் மூன்றையும் பார்த்தவர்கள்.
● சுப்பு வேதையா சித்திரவேலு, கருப்பம்புலம்.
? ஒரு மனிதனுக்கு 'செக்ஸ்' எப்போது அற்றுப் போகிறதோ அதற்கு மேல் வாழ்க்கை பயனற்றது என்கிறாரே ஜெமினி கணேசன்?
! காதல் என்பதற்கு ரொம்ப குறுகிய ஒரு அர்த்தம் பண்ணிக் கொண்டிருக்கிறார் காதல் மன்னன். அவருக்காக அனுதாபப்படுகிறேன்.
● ஜி. ராமதாஸ், உள்ளிக்கடை.
? 'நேமாலஜி' குறித்து உங்களுக்கு நம்பிக்கை உண்டா...?
! 'THHARRAASOO என்று போடுவதிலா...? NNNO!
● வி.எஸ். கணேசன், சென்னை – 78.
? உங்களை டீ.வி.யில் நாட்டுக்கு ஏதாவது உருப்படியாகச் சொல்லுங்கள் என்றால் என்ன சொல்வீர்கள்...?
! சீக்கிரமா டிஸ்கவரி சானலுக்கு மாத்துங்க; இல்லாட்டி டீவியை அணைச்சுடுங்க.
● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.
? மனிதர்களில் உயர்ந்தவர்கள் யார்? தாழ்ந்தவர்கள் யார்...?
! உயர்ந்தவர்கள்...? தேடிக் கொண்டிருக்கிறேன். தாழ்ந்தவர்கள் – தேடாமலே கண்ணில் படுகிறார்கள். சமீபத்திய உதாரணம் : இலங்கை விளையாட்டு வீராங்கனை சுசாந்திகா, வி. துறை அதிகாரி ஒருவர் தம்மைத் தவறாக நடத்தியதாகக் குற்றம்சாட்ட, அதை மறுக்குமுகமாக, விளையாட்டுத் துறை அமைச்சர் மங்கா சமவீரா "சுசாந்திகா நீக்ரோவைப் போலிருக்கிறார்... அவருடன் யார்தான் உறவு கொள்ள விரும்புவார்கள்?..." என்று கேவலமாகப் பேசியிருக்கிறார். இலங்கையில் பெண்கள் அமைப்புகள் கொதிக்கின்றன. சுசாந்திகாவையும் பெண்களையும் மட்டுமின்றி நீக்ரோக்களையும் இழிவுபடுத்துவதாக இருக்கிறது அமைச்சரின் பேச்சு.
● ப. ராமகிருஷ்ணன்,
ஆவணத்தாங்கோட்டை.
? எல்லா திருமணங்களும் சுயமரியாதைத் திருமணங்களாக நடக்கும் காலம் வந்தே தீரும் என்கிறாரே முதல்வர் கருணாநிதி?
! திருமணங்களையாவது அரசியலாக்காமலிருக்கலாம்! எந்த முறையில் திருமணம் செய்து கொண்டாலும் இறுதி வரை சுயமரியாதையுடன் இருவரும் இருப்பதுதான் முக்கியம்.
● அருண்குமார்,
தேவராயபுரம் அஞ்சல்.
? குழப்புவதற்கு அதிகத் திறமை வேண்டுமா? அல்லது சொதப்புவதற்கு அதிகத் திறமை வேண்டுமா? – தயவு செய்து இந்தக் கேள்விக்கு சொதப்பாமல் குழப்பவும்.
! குழப்பலுக்கும் சொதப்பலுக்கும் என்ன வித்தியாசம்? குழப்பம் சொதப்புகிறதா? அல்லது சொதப்பல் குழப்புகிறதா... இதை முதலில் விளக்குங்கள். அப்புறம் நான் சொதப்பாமல் குழப்புவது பற்றி யோசிக்கலாம்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ரா. சிவா,
PTP மளிகை,
26, சத்திரம் வீதி,
உடுமலை - 642 126.


• எல்லாம் பதினாறு!


• விமானம் விழுந்து...


• செய்வதைச் சொல்லட்டும்


• வேறு யார்...?!


• குறுகிய காதல்!


• திருமணப் பேச்சு!

# புகைச்சலில் போட்டி அ.தி.மு.க.







"கட்சியையும், இரட்டை இலைச் சின்னத்தையும் ஜெயலலிதாவிடமிருந்து கைப்பற்றி, எம்.ஜி.ஆர். ஆட்சியை தமிழகத்தில் மீண்டும் கொண்டு வர வேண்டுமென்ற லட்சியத்துடன் துவக்கப்பட்ட போட்டி அண்ணா தி.மு.க. (அல்லது அ.தி.மு.க. - 2) நந்தவனத்து ஆண்டியின் கதையாக முடிந்து விடுமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் அக்கட்சியின் தொண்டர்கள். அதிலும் குறிப்பாக சமீப காலங்களில் கண்ணப்பன், முத்துசாமி போன்றோர் ஜெ. அணியுடனான இணைப்பு முயற்சிகளில் ஈடுபட்டிருப்பது வெளிப்படையாகத் தெரியத் தெரிய, தொண்டர்கள் கொஞ்சம் கலங்கித்தான் போயிருக்கிறார்கள். மீண்டும் ஜெயலலிதா தலைமையில் செயல்படுவதற்குப் பதிலாக அரசியலை விட்டே விலகத் தயார்" என்று நம்மிடம் சொன்னார் போ. அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

உண்மையில் அந்தக் கட்சியில் என்னதான் கோளாறு; அல்லது எங்கேதான் கோளாறு, இல்லை யாரிடம்தான் கோளாறு? "எஸ்.டி.எஸ். தவிர மற்ற எல்லோரும் சமகாலத்துத் தலைவர்கள். எம்.ஜி.ஆர் மற்றும் ஜெ. ஆட்சியின் போது 'அனுபவித்தவர்கள்'. ஆகவே அவர்களுக்குள் இப்போது ஏற்பட்டிருப்பது ஈகோ பிரச்னை தான். எஸ்.டி.எஸ். உடல் நலம் சரியில்லாத காரணத்தால் துடிப்பாக இயங்கி நிலைமையைச் சரி செய்ய முடியாத நிலையில் இருக்கிறார்!" என்று சொன்னார் இப்போது கட்சியில் தீவிரம் காட்டாத பிரமுகர் ஒருவர்.

"போட்டி அ.தி.மு.க.வைத் துவக்கியது நாங்கள்தான்!" என்பது கண்ணப்பன் - முத்துசாமியின் வாதம். சமீபத்தில் நடந்த அந்தக் கட்சியின் மாவட்டச் செயலாளர்கள் கூட்டத்தில் நீலகிரி மாவட்டச் செயலாளர் மணி, 'மீண்டும் ஜெவிடம் போகாதீர்கள். கட்சியை நல்ல முறையில் நடத்துங்கள்; எங்களைப் புதை குழிக்கு அனுப்பி விடாதீர்கள்!' என்று வேண்டிக் கொண்டபோது, 'போடா

வெண்ணெய்! போட்டி அ.தி.மு.க. எப்படிப் பொறந்தது என்று தெரியுமாடா?' என்று கண்ணப்பன் அவரைக் குதறி விட்டார்.

திருநாவுக்கரசு - மூப்பனார் நெருக்கம், கண்ணப்பன் கோஷ்டிக்குக் கொஞ்சம் எரிச்சல் என்பதால், "யாரைக் கேட்டுக் கொண்டு இவர் 'மூன்றாவது அணி' என்று சொல்லிக் கொண்டு திரிகிறார். இவர் தன்னிச்சையாகச் செயல்படுவது ஏன்?' என்று கேட்கிறது கண்ணப்பன் கோஷ்டி.

கண்ணப்பனுக்கு இப்படிக் கொம்பு சீவி விடப்பட்டதில், (சசிகலா) நடராஜனுக்குப் பங்கு இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதாவது, 'ஊழல் குற்றச்சாட்டுகள் மற்றும் வழக்குகள் காரணமாக, ஜெ. தேர்தலில் போட்டி போட முடியாத நிலை வரும்; அந்தச் சூழ்நிலையில் கட்சியில் இருந்தால், நீங்கள் முதல்வர் ஆவதற்குக் கூட வாய்ப்பு இருக்கிறது!' என்று நடராஜன் கண்ணப்பனிடம் சொன்னதாக ஒரு தரப்புச் செய்தி!

ஆனால் ஜெ. அவரது தளபதிகளான சேடப்பட்டி, சத்தியமூர்த்தி போன்றோர் மூலமாகக் கண்ணப்பனோடு தொடர்பு வைத்திருப்பதாகவும் இன்னொரு தரப்பில் சொல்கிறார்கள்!

"கட்சியின் 132 பொறுப்பாளர்களில் 92 பேர், மீண்டும் ஜெ.வுடன் இணையக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கிறோம். எங்களிடம் இருக்கும் எம்.பிக்கள், எம்.எல்.ஏக்கள் ஆகியோர் ஜெ.விடம் மீண்டும் போகவே மாட்டார்கள்" என்று உறுதியாகச் சொல்கிறார், போ. அ.தி.மு.க.வின் தலைமை நிலையச் செயலாளரான சைதை துரைசாமி. "இரட்டை இலைச் சின்னம் தாற்காலிகமாக முடக்கப்பட்டாலும் சரி; ஜெ.வை அரசியலில் இருந்தே ஒழித்துக்கட்ட வேண்டும். எங்கள் ஆட்சியைப் பொறுத்த வரை லோக்கலில் தனிப்பட்ட முறையில் செல்வாக்குள்ள பிரமுகர்கள் ஐம்பதுக்கும் மேற்பட்டோர் உண்டு. சரியான கட்சியைத் தேர்ந்தெடுத்து கூட்டணி அமைத்தால், பெரும்பாலோர் வெற்றி பெற வாய்ப்பு உண்டு. சின்னம் ஒரு பிரச்னை யில்லை!" என்று சொல்கிறார் துரைசாமி.

"தேர்தலில் ஒரு மூன்றாவது அணி அமையும். இப்போது ஏற்பட்டுள்ள புகைச்சல் சரியாகிப் போகும்!" என்று நம்மிடம் உற்சாகத் தோடு திருநாவுக்கரசு சொன்னாலும் அவரது நிலை கொஞ்சம் பரிதாபமாகவே இருக்கிறது. அரசியல் ரீதியாக போட்டி அ.தி.மு.கவை ஒரு சக்தியாக வளர்ப்பதென்பது அவரது நோக்கம். ஆனால் மற்ற கட்சித் தலைவர்களிடையே அவருக்குள்ள நெருக்கம், கண்ணப்பன் - முத்துசாமி கோஷ்டிக்கு எரிச்சலைக் கொடுக்கிறது. ஏதோ சதி செய்கிறார் என்று எண்ண வைக்கிறது.

இப்போதுள்ள நிலைமைகளைப் பார்க்கும் போது, ஜெ.வின் நெல்லை மாநாட்டின் போது போ. அ.தி.மு.க.வில் கொஞ்சம் சலசலப்பு உண்டாகலாம். ஆனால் அதையும் மீறிக் கட்சி இயங்கிக் கொண்டுதான் இருக்கும் என்றாலும் வரும் தேர்தலுக்குப் பிறகுதான் அதன் ஆயுள் சரியாகக் கணிக்கப்படும் என்பதே அரசியல் நோக்கர்களின் கருத்து! ●

— ப்ரியன்



## ஊதுவத்தியில் உலக சாதனை!

இந்தியா சுதந்தரமடைந்த பொன் விழாவைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் இந்த வேளையில், குஜராத் மாநிலத்திற்கு உலக அளவில் புகழ் தேடித்தரத் தாம் ஏதாவது செய்ய வேண்டுமென எண்ணினார் 36 வயதான, ஆமதாபாத்தில் வாழும் வாஹேலா. இவர் ஊதுபத்தி செய்வதால், அதிலேயே சாதனை படைக்கத் தீர்மானித்தார். தொடர்ந்து 60 மணி நேரம் எரியக்கூடிய, 14 அடி நீளமும், 6 அங்குல சுற்றளவும் கொண்ட இரண்டு ஊதுபத்திகளைத் தமது தொழிற்சாலையிலே தயாரித்தார். இதற்காகத் தாம் தினமும் 6 மணி நேரம் உழைத்து 2 மாதங்களில் முடித்ததாகக் கூறுகிறார். இது ஒவ்வொரு 16 மணி நேரம் எரிந்த பிறகும் வெவ்வேறு மணம் கொடுக்கும்படி தயாரிக்கப்பட்டுள்ளது. கின்னஸ்ஸில் இடம் பெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

நன்றி : டைம்ஸ் ஆப் இந்தியா; தகவல் : ஆமதாபாத் ஆர். பாண்டுரங்கன்

# டைனிங் டேபிள்

"ஹலோ! நான் சுமி... 'மறுபடியும் சுமியை எழுதச் சொல்லுங்க'ன்னு டெய்லி வந்து குவிஞ்ச கடிதங்களைப் பார்த்து கல்கி எடிடோரியல்லேருந்து போன் பண்ணாங்களா... அதான் வந்துட்டேன், திரும்பவும் உங்களை வொள்ளு பண்ண...

டைனிங் டேபிள்னு டைட்டில் பார்த்ததுமே விஷயம் என்னன்னு உங்க மனசுல ஒரு 'ரூட்' போட்டிருப்பீங்க... ஆமாங்க, சாப்பாட்டைப் பத்தித்தான் நாம பேசப் போறோம். வள்ளுவர் காலத்துலேருந்து சொல்லிக்கிட்டிருக்கற விஷயந்தானேம்பீங்க. நாம கொஞ்சம் வித்தியாசமா பார்ப்போம். இன்னைக்கிருக்கிற சூப்பர் சானிக் ஸ்பீட் வாழ்க்கைல சாப்பாடு ஒரு பெரிய வேலையா போயிடுது. அதை எப்படி அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டு ஆபீஸ்ல ஓ.டி செய்து ரஜினி படத்து ஃபர்ஸ்ட் டே ஃபர்ஸ்ட் ஷோ, பையனோட எல்.கே.ஜி. அட்மிஷன், வீட்டுக்காரியோட அஃபிஷியல் டூர்னு எல்லாத்துக்கும் வளைஞ்சு கொடுக்கறதுன்றதுதான் பிரச்னை. நம்புங்கள் நம்மால் முடியும்ங்கறாங்க டாக்டர் எம். எஸ். உதயமூர்த்திக்கு அடுத்தபடியா பாஸிடிவ் திங்கிங் பாதையிலே போய்க்கிட்டிருக்கற பி. விஜயா, ஆர். அமுதா. இவங்க இரண்டு பேரும் மாம்பலம் ஹெல்த் சென்டர்ல உணவு நல ஆலோசகர்கள். டைனிங் டேபிளுக்காக அவங்களைப் பார்த்தப்போ தண்ணியைப் பத்தித்தான் முதல்ல பேசினாங்க...

நம்ம உடல்ங்கற ஐக்கிய முன்னணியை இணைக்கற common minimum programme *தண்ணி* தான்! (அரசியல் செயல்திட்டம் மாதிரியெல்லாம் அது பொதுவா ஃபெயில் ஆகாது.) கடைசி செல் வரைக்கும் ஊட்டச் சத்தைக் கொண்டு போய்ச் சேர்க்கிறது தண்ணியோட வேலை. நாம திங்கற சத்துள்ள உணவு, சத்தையான உணவு எல்லாத்துலேயும் கூட-குறைய இருக்கிற முக்கிய ஊட்டச் சத்துக்களைக் கரைச்சு கரைச்சு செல்களுக்குப் புகட்டுறது தண்ணிதான். இது மூலமா உடம்புல ரத்த ஓட்டத்தைச் சீரா வைக்கறதும் உடல் வெப்பத்தைச் சமச்சீரா மெயின்டெயின் பண்றதும் தானாகவே நடந்து போகுது.

அதனாலேதான் நம் உடம்புல அறுபத்தஞ்சு சதவிகிதம் தண்ணியை வைச்சுப் படைச்சிருக்கான் பிரும்மா! (யானையோட உடல்ல எழுபது சதவிகிதம் தண்ணியாம்...! நம்ப முடியுதா!)

தண்ணி நிறைய குடிக்கணும்னு சொல்றதுக்கு ஒரு சுமி தேவையில்ல... அது உங்களுக்கே தெரியும். ஆனா, இன்னைக்கு முக்கியப் பிரச்னை எங்கே போனாலும் சுத்தமான தண்ணி கிடைக்கறதில்லையேன்றதுதான்.

பர்ஸ¬ கொழுத்தவங்க மினரல் வாட்டர் வாங்கிக் குடிச்சுக்கறாங்க... மத்தவங்க, கூச்சப் படாம வீட்ல காய்ச்சி ஆறவைச்ச தண்ணியை பாட்டில்ல போட்டுக் கொண்டு போய்டுங்க... அதுவும் ரயில்ல நீண்ட தூர பிரயாணம்னா பெரிய கேன்லயே கூட எடுத்துட்டுப் போய்டணும். பக்கத்து சீட்காரங்க கேட்டாலும் புன்னகை மாறாமல் குடுக்கலாமே...!

தொடர்ந்து மினரல் வாட்டர் குடிக்கறதால ஏதாவது பாதிப்பு வருமான்னு கூட எனக்கு சந்தேகம் வந்தது... வராதுன்னாங்க அமுதாவும் விஜயாவும். எப்போ பிரச்னை வரும்னா, பாட்டிலை நீண்ட நாள் தொடர்ந்து உபயோகிச்சுக்கிட்டேயிருந்தா அதுல பாசி பிடிக்கும் (இதைப் பல பேர் கவனிக்கறதேயில்ல...) அப்புறம் கிருமி உற்பத்தி ஆகி பிரச்னை தரும். அதனாலே அப்பப்ப பாட்டிலுக்கு, கேனுக்கு ரெஸ்ட் கொடுத்து காத்தாட விடுங்க...

சரி, தண்ணியெல்லாம் சுமந்துகிட்டிருக்க முடியாதுன்னு சலிச்சுக்கறாங்க... ட,



காப்பி,
சுக்குக் காப்பின்னு
குடிச்சு, அதன் மூலமா கூட 'தண்ணி' ஏத்திக்கலாம்! ஒரு நாளைக்கு 2.6 லிட்டர் கட்டாயத் தேவை. அதிகம் குடிச்சாலும் நல்லதுதான்.

கைக் குழந்தைக்குத் தண்ணி குடுக்க ரொம்ப யோசிப்பாங்க... அதே மாதிரி பிரசவம் ஆன கையோட கொஞ்ச நாள் தண்ணி சாப்டாதேன்னுவாங்க. அப்புறம் லூஸ் மோஷன் ஆகிற நேரத்துல தண்ணியைக் குறைன்னு வாங்க... இதெல்லாமே பழைய பாட்டியம்மா கதை...

சுத்தமான தண்ணியை இந்த மூணு கேஸ்லயும் தைரியமா கொடுக்கணும். அது ரொம்ப அவசியம். அதுவும் கடைசி கேஸ்ல தண்ணி குடுக்காம
இருந்தா உயிருக்கே ஆபத்து.
கிருமியை வெளியேத்தற ஜோர்ல உடம்பு ஸ்டாக்ல இருக்கற தண்ணியையெல்லாம் உபயோகிச்சுடும். அந்த இணைப்புச் சங்கிலி இல்லாம உயிர் பிரேக் டவுன்தான்!

அதிகம் தண்ணி குடிக்கக் கூடாதுன்னு கிட்னி பேஷன்ட்களை மட்டும் எச்சரிக்க வேண்டியிருக்கு. இவங்க அளந்து அளந்துதான் குடிக்கணும். ஏன்னு கேட்டா, வியர்வையா வெளியேறினது போக, மிச்சமுள்ள தண்ணியை எல்லாம் வெளியேத்தற பொறுப்பு சிறுநீரகங்களோடதுதான். ஏற்கெனவே

கோளாறாகி சிறுநீரகங்கள் சலிச்சுக்கறபோது, அதிகம் தண்ணி குடிச்சு அதுங்களோட வேலையை அதிகப்படுத்துனா அதுங்க என்ன செய்யும்? அதனால அவங்க மாத்திரம் அள வாத்தான் குடிக்கணும்.

எப்பவும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில சாப்பிடறதுதான் நல்லது. ஆனாலும் பாருங்க... சிலரால நாக்கை அடக்க முடியாது. வீட்டு லேன்னு இல்லை... வழியில எதைப் பார்த் தாலும் வாங்கித் திங்கணும்னு தோணும். சாப்பிடவும் செய்வாங்க. அப்புறம் வீட்டுக்கு வந்து அஜீரணம், வயித்து வலின்னு அவதிப் படவும் செய்வாங்க. மருந்து மாத்திரைன்னு சாப்பிடுவாங்க. எதுக்கெடுத்தாலும் மருந்து மாத்திரைன்னு சாப்பிடறது உடம்புக்கு நல்லதில்லையே. அதனால இதுமாதிரியான 'நாநீனர்'கள் அதிகம் தண்ணி குடிக்கறது அவசி யம். அப்படிக் குடிச்சா அநேகமா வயிறு ட்ரபிள் பண்ணாது. சில பேருக்கு மாத்திரம் எப்படி எதைச் சாப்பிட்டாலும் ஜீரணமாகு துன்னு நீங்களே ஆச்சரியப்பட்டிருப்பீங்க. காரணம் என்னன்றீங்க? அவங்க அதிகமா தண்ணி குடிக்கிறதுதான் முக்கியமான காரணமா இருக்கும்!

**வே**று சில பேரைப் பார்த்தீங்கன்னா வேர்த்துக் கொட்டும். உடம்பெல்லாம் கச கசன்னு இருக்கும். அப்பா! நமக்கு அந்த மாதிரி இல்லைன்னு சந்தோஷப்படாதீங்க. வேர்க்கறது ரொம்ப நல்லது!

ஏன் வேர்க்குதுன்னு தெரியுமா? நம்ம உடம்பு எப்பவுமே 98.4 டிகிரி பாரன்ஹீட்தான் இருக்கணும். கூடக் குறைஞ்சா டேஞ்சர். நாம அதிக உடல் உறுப்புகளை அதிகம் பயன் படுத்தறபோது - அதாங்க கொஞ்சம் உடம்பை வளைச்சு வேலை செய்யறபோது, இயந்திரங் கள் மாதிரி நம்ம உடம்பும் சூடாகும். அந்தச் சூட்டைத் தணிக்கணுமே! அதுக்குத்தான் அதிகம் வேர்க்க ஆரம்பிக்குது. அந்த வேர்வை தான் நம்ம உடம்புல ஏற்பட்ட அதிகப்படி உஷ்ணத்தை எடுத்துக்கிட்டு ஆவியாகி உடம்புச் சூட்டை சமநிலைல வைக்குது. அத னால வேர்த்தா சந்தோஷப்படுங்க. அப்புறம் அதை ஈடுசெய்ய, தண்ணி குடிங்க.

**அ**ப்புறம் இன்னொண்ணு. நீங்க என் னோட அக்காவைப் பார்த்திருக்கீங்களா? அதான் என் பெரியம்மா பொண்ணு பிரேமி. 45 வயசு. என்னை மாதிரி ரெண்டு மடங்கு வயசு. ஆனா எங்க ரெண்டு பேரையும் நீங்க சேர்த்துப் பார்த்தா யாரு சுமி, யாரு பிரேமின்னு உங்களால கண்டுபிடிக்கவே முடியாது. அப்படியொரு இளமையோட ஃப்ரெஷ்ஷா இருப்பா. அவ தோல் அப்படி பளபளப்பா இருக்கும்.

இதுக்கு என்ன காரணங்கறீங்க? அவ வஞ்சனையில்லாம தண்ணி குடிக்கிறதுதான். தண்ணிக்கும் இளமைக்கும் என்ன சம்பந்தம்ங் கறீங்களா? இருக்கு.

எந்தவொரு முணுமுணுப்பும் இல்லாம காங்கிரஸ் ஆதரிச்ச வரைக்கும் ஐக்கிய முன் னணி அமைச்சரவைக்கு ஆபத்தில்லாம இருந்த மாதிரி, நம்ம உடம்புல இருக்கற செல்கள் ஃப்ரெஷ்ஷா இருக்கற வரைக்கும்தான் நம்ம தோல் சுருக்கமில்லாம இளமையா இருக் கும். செல்கள் சோர்ந்து போனாத்தான் பி.ஜே.பி. மாதிரி சுருக்கத்துக்குக் கொண்டாட் டமாயிடுது!

சுருக்கத்தை விரட்டறதுக்கு என்ன செய் யணும்னு கேக்கறீங்களா? அதுக்கு செல்கள் ஃப்ரெஷ்ஷா இருக்கற மாதிரி பார்த்துக் கணும். இதுக்கு என்ன பண்றதுன்னு கேட்டா, ஆன்சர் ரொம்ப சிம்பிள். தாராளமா தண்ணி குடிங்க. தண்ணிதான் செல்களைப் புத் துணர்ச்சியோட வெச்சுக்கும்! அதனாலே, உங்க டைனிங் டேபிள்ல எப்பவும் சுத்தமான தண்ணி ஒரு ஜக் இருக்கட் டும்...

இந்த 'டைனிங் டேபிள்' பகுதில உங்க கேள்விங்களுக் கும் அப்பப்போ பதில் சொல் வேன்... தாராளமா கேட்கலாம். அதுக்காக 'சுமி நீ தண்ணி அடிப் பியா'ன்னெல்லாம் அசட்டுக் கேள்வி கேட்கக் கூடாது. காலைல அடிப்பேன்... மெட்ரோ வாட்டர் பம்புல..!



# நிமோனியா கண்ட இளசுகள்!

**சென்னையில் போனி. எம்!**



• நிகழ்ச்சி ஆரம்பத்தில்

ஸ்டேடியத்தின் புல்வெளியில் மாலை ஐந்து மணியிலிருந்தே இளமைப் படையெடுப்பு ஆரம்பமாகி விட்டது. கலர் கலர் கலராகக் காரிலும் தேரிலும் வந்திறங்கிய பாப் ரசிகர்கள். விதவிதமான ஹேர்-

• முடிவில்...

போனி-எம் (BoneyM) என்றால் என்ன என்று இருபது பிளஸ் இளசுகளைக் கேளுங்கள். ஜாங்கிரி என்பார்கள். ஜிரா என்பார்கள். மேலும் சிலருக்கு அந்தப் பெயர் ஓர் அபின்.

எழுபதுகளின் இறுதியிலிருந்து உலகைக் கலக்கும் இந்த பாப் இசைக் குயில்கள் (நிறத்திலும்) கடந்த புதன் கிழமை சென்னை நேரு ஸ்டேடியத்தில் மையம் கொண்டு ஒரு புயலை உற்பத்தி செய்து, புண்ணியம் கட்டிக் கொண்டார்கள்.

ஜெயலலிதா தன் வேதா நிலையத்துக்குச் சற்றும் சளைக்காமல் தன் காலத்தில் கட்டுவித்த இந்த அபார

ஸ்டைல்கள். விதவிதமான அரைகுறை ஆடைகள். (நம்புங்கள் - சென்னையில்!) நுனி நாக்கு ஆங்கிலமும் காதில் ஜிமிக்கி அல்லது கம்மலுக்குப் பதில் செல்போனும் கையில் கொக்ககோலா பேப்பர் குவளையுமாக எங்கு பார்த்தாலும் கிளிகள், மயில்கள், புறாக்கள் தத்தம் காதல் தோழர்களுடன்.

இன்னும் கொஞ்சம் முன்னேறியவர்கள், டின் பீரும் மார்ல்பரோ சிகரெட்டுமாக காரில் சாய்ந்து, கனவில் மிதந்து கொண்டிருந்தார்கள். அத்தனை பேர் நரம்புகளிலும் ஒரேவிதத் துடிப்பு - போனி எம்! போனி எம்!

லக்ஷ்மண் ஸ்ருதி, ரகுராஜ் சக்கரவர்த்தி, உல்லாசப் பறவை, ஒய்யாரப் பறவை என்று ஆங்காங்கே போஸ்டரிலும் கல்யாண மண்டபங்களிலும் மேடை மெல்லிசைக் குழுக்களைச் சந்தித்திருப்பீர்கள்.

போனி எம் அந்த ஜாதிக்காரர்கள்தாம். ஒரே வித்தியாசம், நம்மவர்களைப் போல ஆயிரங்களில்



• போனி-எம் ரசிகர்கள்...

அல்லாமல் இவர்கள் மில்லியன்களில் வாழ்பவர்கள். தவிர, சினிமாப் பாடல்களைத் தொடாமல் பிரத்தியேகமாகப் பாடல்களை உருவாக்கி, எம், வீ சேனல்களிலும் எல்லாக் கண்டங்களிலும் முத்திரை பதித்தவர்கள்.

அபாரமான வாத்தியங்களையும், அசகாயக் குரல்களையும் வைத்துக் கொண்டு, நிகழ்ச்சிக்கு வண்ணம் சேர்க்க, மேடையிலேயே நடனமும் ஆடி, ஆரம்பித்த மிகச் சில விநாடிகளிலேயே ரசிகர்களை ஒருவித 'யோக், மோன, சமாதி' நிலைக்குக் கடத்திப் போய் விடுகிறவர்கள்.

ஏழு மணிக்கு ஆரம்பம் என்று அழைப்பிதழ் சொன்னாலும் எட்டே முக்கால் வரைக்கும் சாவகாசமாக சுருதி சேர்த்துவிட்டு, அப்புறம் உள்ளே போய் டிரெஸ் மேக்-அப் பண்ணிக் கொண்டு வந்த தாமதம் பற்றிய சு. உணர்வு ஏதுமில்லாமல் ஹூர்ரே என்று ஆரம்பித்ததுதான் தாமதம். பாம் வெடித்தாற்போல ரசிகர்கள் ஹோவென்று குரல் அலற, நம் பண்பாட்டுச் சின்னமான விஸில்கள் விண்ணைப் பிளக்க, ஹாலோஜன் விளக்குகள் விதவிதமாய் ஒளி பாய்ச்ச, ஸ்டேஜில் குழாய் வைத்து சாம்பிராணியோ, ட்ரை ஐஸோ பீய்ச்சி அடித்துப் புகை சூழ... அதிரும் ட்ரம்களில் நரம்புகள் முறுக்கிக் கொண்டு, ரத்த ஓட்டம் ஒருகணம் நின்று, பாய்ந்தது!

சென்னைக்கு வந்தவர்கள் ஒரிஜினல் போனி எம் நால்வர் அல்ல. ஒரு கறுப்பழகி மட்டுமே ஆரம்ப காலத்தவர். பிறர், வாரிசுகள்.

சரவணபவன் அண்ணாச்சி ஊருக்கு ஊர் கிளை திறப்பது போல இவர்கள் சிஷ்யப் பிள்ளைகளைத் தயார் செய்து, நாட்டுக்கு நாடு அனுப்புகிறார்கள். ஆனால் பாடல்களும் இசையும் பிற ஜாலங்களும் மூலவர்களை நகலெடுத்தே வழங்கப்படுவதால், வித்தியாசம் தெரியவில்லை.

இந்தக் குழு எப்படி இப்படி ஆயிரக்கணக்கானவர்களை அங்கே இங்கே அசையவிடாமல் கட்டிப் போடுகிறது என்று ஆராய்ந்ததில் சில சமாசாரங்கள் புலப்பட்டன.

அத்தனை பேருக்கும் அபாரமான அண்டர்ஸ்டாண்டிங் இருக்கிறது. எங்கே தொட்டால் ரசிகர்கள் சிலிர்ப்பார்கள், எங்கே பட்டால் விஸிலடிப்பார்கள், எங்கே அடித்தால் கண்ணீர் விடுவார்கள் என்ற சூட்சுமம் வெகு அலட்சியமாகத் தெரிந்திருக்கிறது.

பாடுபவர்கள் குரலில் சில பிரத்யேகமான ரகசியச் சுரங்கங்களை ஒளித்து வைத்து இருக்கிறார்கள். பத்து நிமிஷத்துக்கு ஒருதரம் பற்ற வைத்த ராக்கெட் மாதிரி, அவர்கள் குரலை உயரே வீசி எறிய, பார்வையாளர்கள் மத்தியில் உற்சாகப் பிரளயம்.

தடதடக்கும் இசைக்கு ஒத்தடம் கொடுக்க ஒரு சாக்ஸஃபோன், உருக்கம் சேர்க்க எலக்ட்ரானிக் குழல், துடிக்க வைக்க ட்ரம்பெட் என்று கருவிகளைச் சரியான கலவையில் உபயோகிக்கிறார்கள்.

இதெல்லாம் போதுமா?

பாடலின் முதல் வரியில் அந்தக் கால கண்ணாம்பா மாதிரி இழுத்துப் போர்த்திக் கொண்டு ஆடும் கிளிகள், அடுத்தடுத்த விநாடிகள் உதிரும்போது ஆடையின் ஒவ்வொரு போர்ஷனாக அவிழ்த்துக் கடாசி விட்டு, வேறு வழியில்லாமல் மிச்சமிருக்கிற அட்சயபாத்திரமான சிங்கிள் பீஸ் வெள்ளாடையில் சுழன்று ஆடுகிறபோது ரசிகர்களுக்கு நிமோனியா வந்து விடுகிறது.

அன்றைய நிகழ்ச்சியில் போனிஎம்மின் மிகப் பிரசித்தி பெற்ற Daddy cool பாடலின் போது இந்த சடங்கு நிறைவேற, ஏஸிக் குளிரில் (உள் அரங்கம்) ஏற்கெனவே உறைந்து கிடந்த காதல் ஜோடிகள் மிகவும் உ. வசப்பட்டு தத்தம் இணையுடன் மேலும் இணைய, இசையும் அந்தச் சூழலும் இருட்டும் மேற்கத்திய வாசனையும் – ஒருகணம் இது சென்னை தானா என்று சந்தேகம் வந்து விட்டது. பகிரங்கமாக ஒரு கலாசாரப் புரட்சி!

அரங்கில் ஆங்காங்கே நம் சினிமாக்காரர்கள் சிலரைக் காண முடிந்தது. பாக்கெட் டேப்ரிக்கார்டரில் பதிவுசெய்து கொண்டு போயிருப்பார்களாயிருக்கும். விரைவில் போனிஎம் இசையில் தீந்தமிழ்த்திரைப் பாடல்களைக் கேட்டு மகிழுங்கள்.

இதில் irony என்னவென்றால் இவற்றில் சில நாம் கேட்டவைதான்.

ஆரம்பத்தில் அந்த உற்சாகக் கறுப்பழகி பாடிய ஒரு பாடல் (இறை வணக்கம் போலும்) தொடங்கியதுதான் தாமதம். ஆடியன்ஸ் தரப்பிலிருந்து, 'மின்னல்லே...ஹே மின்னல்லே...ஹே' என்று பாட ஆரம்பித்து விட்டார்கள்.

போனி எம் வரும் பின்னே, ரகுமான் தருவார் முன்னே! ●

— ஔரங்கசீப்

படங்கள் : யோகா

# நிலா வேட்டை

## 6



பா. ராகவன்

“சே, ஒரு ஸ்வெட்டராவது எடுத்து வந்திருக்கலாம். காலைல பல் தேச்சிட்டு இருந்தவனைக் கழுவ விடாமல் பிடிச்சி இழுத்துட்டு வந்துட்டே?” என்றான் ரங்கா.

இருட்டி விட்ட பெங்களூர். ரஞ்சனியின் கண்காட்சி நடக்கிற அரங்கிற்குப் போகிற வழியில், காருக்குள் முரட்டு மோதல் நடத்துகிற குளிர் பூதம்.

“ஸாரிடா. எனக்கு எது பற்றியும் யோசிக்கத் தோணலை!” என்றான் ஹரி.

“அது பரவாயில்லை. நாம் இப்போ எதுக்கு பெங்களூர் வந்திருக்கோம்?”

அவன் யோசித்தான். விடிந்தால் கோடி ஜோலி காத்து இருக்கிறது. இரண்டு நாட்களில் எடிட்டிங் முடித்தாக வேண்டும். தொடர்வதான பணிகளுக்கு ராட்சஸ உழைப்பும் கவனமும் வேண்டியிருக்கும். எதன்பொருட்டு இப்படி பெங்களூர் வந்து இலக்கில்லாமல் அலைபாய்கிறேன்? ரஞ்சனி. மற்றும் அவளுடன் வந்திருக்கிற ஸ்டீபன். நல்லது. என்ன தெரிந்து கொண்டு விடப் போகிறேன்? ஓவியக் கண்காட்சியின் உள் அரங்கில் ஓர் ஓரமாக ரஞ்சனி உட்கார்ந்திருப்பாள். எதிரே இவன் அமர்ந்து ஏதாவது பேசிக் கொண்டிருப்பானாயிருக்கும். அல்லது, வருகிறவர்களை வரவேற்றபடி.

ஆளைப் பார்த்ததும், “அட, வரமாட்டேன்னு சொன்னீங்க? என்ன திடீர்னு?” ரஞ்சனி கேட்டால், சொல்வதற்குக் கைவசம் பதில் ஏதுமில்லை. கண்ணியமாக நாலடி தள்ளி இருந்து, ஸ்டீபன் என் தவிப்பை ரசிப்பானாயிருக்கும்.

இல்லை. அது இல்லை நோக்கம். மறைந்து இருந்து கண்காணிக்கப் போகிறேன் என்று ஹரி சொன்னான்.

“ஸாரி, நான் வரலை ஹரி” என்றான் ரங்கா.

“ஏன்?”

“நீ சராசரிக்குக் கீழே போயிட்டிருக்கேன்னு நினைக்கறேன். எயிட்ஸை விட சந்தேகம் சீக்கிரம் ஆளைக் கொல்லும். நீ கொஞ்சம் கொஞ்சமா செத்துட்டு இருக்கே.”

ஹரி, தலைகுனிந்து இருந்தான். சுயவெறுப்பிலும் அவமானத்திலும் மிகவும் குறுகிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. ரங்காவின் குற்றச் சாட்டை அவ

னுக்கு மறுக்க விருப்பம் இல்லை. அதுதானே உண்மை? ஆனால் அடுத்தடுத்துத் தன்னைச் சீண்டிப் பார்க்கிற சம்பவங்கள். சில தினங்களில் கலைந்து விட்ட வாழ்க்கைக் கோலம். தவறு, தன் மீதே இருக்கட்டும். ஆனால் சந்தேகம் தீராத வரை சுகம் ஏது?

"ரங்கா, நான் உன்னைக் கட்டாயப் படுத்தலை. பிடிக்கலைன்னா, நீ ஓட்டலுக்குப் போயிடு. ஏதோ ஒரு உந்துதல் என்னைப் போ, போன்னு துரத்தறது. என்னமோ விபரீதம்னு ஒரு உள்ளுணர்வு. என் தனிப்பட்ட குறைபாட்டுக்கும் இதுக்கும் சம்பந்தமில்லைன்னு இப்பத் தோணுது. ஆனால், அதுவே அவங்களுக்கு அட்வான்டேஜா ஆயிடுமோன்னுதான் நினைக்கிறேன். அவங்க ரெண்டு பேரும் ரயில்வே ஸ்டேஷனில் எனக்கு டாட்டா காட்டின 'போஸை' நீ பார்த்திருக்கணும். தயவுசெய்து என் ஆங்கிளில் கொஞ்சம் யோசி. எனக்கு அனுதாபம் வேணாம் ரங்கா. வேண்டியதெல்லாம் தெளிவு. எல்லாத்துலயும். தட்ஸ் ஆல்."

ரங்கா, மௌனம் காத்தான். சப்தம் வராமல் ஓடிய பி.டி. வண்டி, ரவீந்திர கலா நிலையத்தை எட்டிப் பார்த்ததும் சற்றுத் தள்ளி நிறுத்தச் சொன்னான் ஹரி.

"இப்ப என்ன பண்ணப் போறதாக உத்தேசம்?"

"டிரைவருக்கு ஒரு அம்பது ரூபா குடுத்து, கழட்டி விடு. போய் அத்தனை ரூபாய்க்கும் டீ குடிச்சிட்டு வரட்டும். நாம் கார் கண்ணாடியை ஏற்றி விட்டுட்டுக் காத்திருக்க வேண்டியதுதான்!"

"எதுவரை?"

"ஏதாவது நடக்கும் வரை" என்றவன், சட்டென்று உதட்டைக் கடித்துக் கொண்டான். எத்தனை கேவலம் இது! நெஞ்சம் முழுக்கக் குப்பைகளை அல்லவா சுமந்து, நாறிக் கொண்டிருக்கிறேன்? கடவுளே, எல்லா விதத்திலும் என் ஆண்மையை ஏன் சோதனைக்கு உள்ளாக்கிக் கொண்டிருக்கிறாய்? எல்லா விதத்திலும்.

எட்டு மணிக்குக் கண்காட்சி முடிந்து, தலைகலைந்த ஆண்களும் பெண்களும் சீரியஸாகப் பேசிக் கொண்டு வெளியே வர, சடாரென்று மின்னல் மாதிரி ரஞ்சனி வெளிப்பட்டாள். ஹரி, படபடப்போடு நகம் கடித்தபடி அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். ஸ்டீபன், ஸ்டீபன் எங்கே? வா, நீயும் வெளியே வா. இன்று எனக்கு ஏதாவது தெரிந்து விட வேண்டும். என் யூகம் அல்லது நான். இரண்டில் ஒன்று பொடிப் பொடி ஆனாலொழிய வேறு வழியில்லை.

கூட்டம் கலைந்து போக, ரஞ்சனி வாசலில் நின்று இருபுறமும் பார்த்துக் கொண்டிருந்தாள். அருகே நின்று பேசிய முதியவர், செயலாளராகவோ அமைப்பாளராகவோ இருக்கக்கூடும். அல்லது வெறும் ரசிகர். ரஞ்சனியின் காதுகள் அவருக்குத் தரப்பட்டிருந்தாலும் கவனம் அங்கு இல்லை என்பது ஹரிக்குத் தெரிந்தது. எதை அல்லது யாரை எதிர்பார்த்து நிற்கிறாள்? ஸ்டீபன்? வழக்கம்போல், புகையிலைத் தூள் வாங்கப் போனவன் இன்னும் திரும்பி வரவில்லையா? தன் மனைவி, யாரோ ஒருவனுக்காக இரவில், நடுரோடில் காத்திருக்கிறாள் என்கிற நினைப்பே அவனுக்கு அருவருப்பாக இருந்தது. ஏதாயினும் சரி. இன்றைய தினம் ஆயுளுக்கும் மறக்க முடியாதபடி அமைந்துவிடப் போகிறது என்று அவனுக்குள் ஒரு குரல் கூறிக் கொண்டே இருந்தது.

"ஹரி, நேரா இறங்கிப் போய் எதிரே நில்லேன். சர்ப்ரைஸா இருக்கும். அல்லது, நீ எதிர்பார்க்கிற ஏதாவது ஒண்ணுன்னா, வியப்புக்கு பதில் அதிர்ச்சி தெரியும் இல்லையா?" என்றான் ரங்கா.

"வேணாம்டா. நான் வந்ததே தெரிய வேண்டாம். எதற்குத் தெரியணும்?"

எதிர்ப்புற சந்திலிருந்து ஸ்டீபன் வந்து கொண்டு இருந்தான். டிராஃபிக்கைக் கடக்கிற விதமாக அவன் நடுச்சாலையில் நிற்க, ரஞ்சனி, பேசிக் கொண்டிருந்த முதியவருக்கு வணக்கம்






கூறி விடைபெறுவது தெரிந்தது.

வழியில் போன ஆட்டோவைக் கை காட்டி நிறுத்தி, இருவரும் ஏறிக் கொண்டதும் ஹரி அவசரமாக இறங்கி பிளாட்பாரத்தில் பேப்பர் மேய்ந்து கொண்டிருந்த டிரைவரை அள்ளிக் கொண்டு வந்து வண்டியைக் கிளப் பச் சொன்னான்.

சம்பிரதாய தமிழ்ப் படங்களின் உச்சக் கட்ட காட்சி. பறக்கும் வில்லனைத் துரத்தும் ஹீரோ. சேஸ், சேஸ், சேஸ். குறுக்கே வரும் கைவண்டிக் காய்கறிக்காரன். சிதறும் முட் டைகோஸ்கள். அலறிக் கொண்டு உயரே எழும்பும் பைக்குகள். பின்னணியில் உக்கிர மான வயலின்கள் மற்றும் எலக்ட்ரானிக் ட்ரம்ஸ். லாங் ஷாட்டில் ஒளிப்பிழம்பு. குளோ ஸப்பில், வில்லனிடமிருந்து விடுவித்துக் கொள் ளும்விதமாக 'சீ, விடுடா, விடுடா' என்று கேட் பதைத் தவிர, வேறெந்த முயற்சியும் எடுக்காத ஹீரோயின். கட் செய்தால், மலை உச்சி. உருளும் பாறைகள். மிரளும் குதிரைகள். கண்ணி வெடிகள் கலர் கலராக வெடிக் கின்றன. விபரீதக் குழப்பங்களின் பிரளயத்தில் வெடித்துச் சிதறப் போவது தான்தான் என்று ஹரி நினைத்தான்.

ஆட்டோ, எம்.ஜி. ரோடைக் கடந்து, டெக்கன் ஹெரால்டை அணைத்துப் போய்க் கொண்டு இருந்தது. சாமர்த்திய டிரைவர், போதிய இடைவெளிவிட்டு, எதையோ உணர்ந்து கொண்டவனாகத் தங்களை அடைகாத்துக் கொண்டு போவதாக ஹரி நினைத்தான்.

திடீரென்று ஆட்டோ ஒரு ஓட்டல் காம் பவுண்டுக்குள் நுழைய, அடுத்தது என்ன? என்கிற விதமாகத் திரும்பிப் பார்த்தான் டிரைவர்.

அவனை செட்டில் பண்ணி அனுப்பி விட்டு இருவரும் கவனமாக அதே ஓட்டலில் நுழைந்தார்கள். ரெஸ்டா ரெண்டில் தேடிப் பார்த்ததில், இல்லை.

''இங்கதான் தங்கி இருக் காங்கன்னு நினைக்கறேன்'' என்றான் ரங்கா.

"நாமும் தங்கறோம்."

"ஃபார் வாட்?"

"தெரியலை."

ரிஸப்ஷனில் இருந்தவன் தமிழன். சட் டென்று ஹரியை அடையாளம் கண்டு கொண்டு, "ஸார், நீங்களா?"

"டபுள் ரூம். ஏஸி இருந்தால் உத்தமம்."

"உங்களுக்கு இல்லாமலா? இங்க ஏதாவது ஷூட்டிங்கா சார்?"

இல்லை, டிஸ்கஷன் என்று சொல்லி விட்டு, சாவியை வாங்கிக் கொண்டு, லிஃப்டை நோக்கி நடந்தான் ஹரி. ரஞ்சனியின் கண்ணில் பட்டுவிடக் கூடாது என்று மிகக் கவனமாக இருந்தான்.

முதல் தளத்தில் அறை. போனதும் சாப்பிட ஆர்டர் கொடுத்து விட்டு, "எந்த ஃப்ளோர்ல இருக்காங்கன்னு எப்படித் தெரிஞ்சிக்கறது?" என்று கேட்டான் ஹரி.

"எனக்கு உன் மூவ்மெண்ட்ஸ் எதுவும் புரி யலை; பிடிக்கலை ஹரி. ரஞ்சனி பார்த்துவிடக் கூடாது என்கிறாய். ஆனால், இருக்கும் இடம் தெரிஞ்சு என்ன ஆகப் போறது? ரெண்டு பேரும் அவரவர் ரூம்களில் விளக்கை அணைத்துவிட்டு, இழுத்துப் போர்த்திக் கொண்டு இந்நேரம் தூங்க ஆரம்பித்திருப் பார்கள்."

அவரவர் அறையில். அவரவர் அறையில். அப்படித்தான் இருக்குமா? அவர்கள், அறை யில்... ச்சே!

"நீ இங்கேயே இரு ரங்கா. பத்து நிமிஷத்தில் வரேன்!" என்று வெளியே வந்து, கதவைச் சாத்தி விட்டு, காரிடாரில் மெல்ல நடக்கத் தொடங்கினான் ஹரி.

முதல் முறையாக, பகிரங்கமாக ஒரு திருட் டுத்தனம்; சண்டாளத்தனம். சொந்த மனைவியை அவளறியாமல் பின் தொடருகிற அயோக்கியத்தனம். கீழ்த்தரமான காரியங்கள் மிக நெருக்கமாகி வருகின்றன. வீட்டுக்குப் போகாமல் ஒரு வாரம் ஓட்டலில் தங்கியது. ஸ்டீபன் வீட்டில் டைரியைக் குடைந்தது. இப்போது இப்படி ஐந்தாம்படைக் காரியம்... என் சரிவுகளுக்கு நானே மண்வெட்டி பிடித் துக் கொண்டிருக்கிறேனா? கடவுளே, ஏன் இத்தனை இழிவுகள்? ஒரு வார்த்தை. ரஞ்

சனியிடம் நேருக்கு நேர் கேட்டு விடலாம் தான். ஆனால் குரல்வளையை மீறி சொற்கள் வர மறுக்கின்றன. அவள் மட்டும் கேட்கவில்லையே? குழந்தை பிறக்காது என்று சொன்னபிறகு ஏன், எப்படி, எதனால் என்று ஒரு கேள்வி? உட்கார்ந்து ஒரு நிமிஷம் துக்கம் கொண்டாடல்? விழி யோரம் ஒரு சொட்டு நீர்? எத்தனை சாதாரணமாகக் கட்டிக் கொண்டு, காதில் முத்தம் பொழிந்தாள்! எதுவுமே நடக்காதது போல எதை எதையோ பேசி, சிரித்து, அமைதி காத்து... ரஞ்சனி, பாதிப்புகளே இல்லாத வெறும் குழந்தை. அல்லது சகலமும் உணர்ந்த ஜாலக்காரி.

நினைவுகள் வேறு எது பற்றியும் போக மறுக்கின்றன. ஒற்றை ஆணியில் சுழலும் பம்பரம். மையம் கொண்ட ஞாபகப் புயல்.

மூன்றாவது ஃப்ளோரை அவன் கடந்து கொண்டிருந்தபோது, சடாரென்று ஒரு கதவு திறந்து, ரஞ்சனி வெளிப்பட்டாள். விநாடியில் லட்சத்தில் ஒரு பகுதி இருக்குமா? இருபதடி தூரத்தில் விழிகள் உரசி, உதிர்ந்த நேரத்தில் சட்டென்று அவன் படிகளில் தாவி, உயரங்களில் உதிர்ந்து, தன் அறையில் சீறி நுழைந்தபோது முற்றிலும் வியர்த்து இருந்தது. வயிற்றில் குதித்து ஆடும் கலவரப் பந்து. இனி என்றென்றும் துடைக்க முடியாத அவமானக் கறை. ரஞ்சனி பார்த்து விட்டாள். கடவுளே, என்ன நினைத்திருப்பாள்? என் சந்தேகம், கீழ்த்தரங்கள் யாவும் வெளிப்படையாகி விட்டன. எதற்காக இப்படி பயந்து ஒளிய வேண்டும்? நின்று, எதிர்கொண்டிருக்கலாம். கொஞ்சம் புன்னகை செய்து, ஹலோ என்று சாதாரணத்தனம் காத்திருக்கலாம். ரிஸப்ஷனிஸ்டிடம் சொன்னது போலவே, டிஸ்கஷன் அல்லது கிரிஷ் கர்னாடை ஓர் அவசர கெஸ்ட் ரோலுக்கு ஒப்பந்தம் செய்ய வந்ததாக ஏதாவது சமாளித்திருக்கலாம். எதுவுமே இல்லாமல் நிராதரவாக மாட்டிக் கொண்டதில் துக்கம் பீரிட்டு எழுந்தது.

# தலை சுற்ற வைக்கும் காங்கிரஸ்!



ஒரு கட்சி அதிகபட்சமாக எத்தனை துண்டுகளாக உடைந்து சிதற முடியும்? கேரளாவிலுள்ள காங்கிஸ் சிதறு தேங்காய் மாதிரியே உடைந்திருக்கிறது என்றால் நம்ப முடிகிறதா?

69-ல் கேரள மாநில காங்கிரஸிலிருந்து சிலர் பிரிந்து வந்து, கே.எம். ஜார்ஜ் தலைமையில் 'கேரளா காங்கிரஸ்' என்ற பெயரில் புதிய கட்சி ஆரம்பித்தனர். ஏறத்தாழ கிறிஸ்தவர்களையே அதிகம் கொண்டிருந்த இதிலிருந்து மாத்தச்சன் என்பவர் பிரிந்து சென்று 'ஒரிஜினல் கேரளா காங்கிரஸ்' என்று ஆரம்பித்தார்.

75-ல் கே.எம். ஜார்ஜிடம் கருத்து வேறுபாடு கொண்ட கே.எம். மாணி, தனியாக வந்து 'கேரளா காங்கிரஸ் (எம்)' என்ற பெயரில் ஆரம்பித்தார். (எம். என்பது மாணியைக் குறிக்கும்).

79-ல் மாணியுடன் கருத்து வேறுபாடு கொண்ட பி.ஜே. ஜோசப் பிரிந்து வந்து 'கேரளா காங்கிரஸ் (ஜோசப்)' என்று தொடங்கினார். பிறகு 85-ல் மீண்டும் மாணி கோஷ்டியிலேயே சென்று இணைந்தார். பிறகு மறுபடியும் பிரிந்து வந்து தமது பழைய கட்சியைத் தொடர்ந்தார்.

89-ல், லோனப்பன் நம்பாடன் என்பவர் ஜோசப்பிடமிருந்து பிரிந்து வந்து 'சோசலிஸ்ட் கேரளா காங்கிரஸ்' கட்சியைத் தொடங்கினார். இதே சமயத்தில் ஜோசப்பிடமிருந்து பிரிந்த பாலகிருஷ்ணபிள்ளையும் 'கேரளா காங்கிரஸ் (பிள்ளை குரூப்)' என்று ஒரு புதிய கட்சியை ஆரம்பித்தார்.

93-ல், மாணி கோஷ்டியிலிருந்து விலகிய டி.எம். ஜேக்கப் என்பவர் 'கேரளா காங்கிரஸ் (ஜேக்கப் குரூப்)' என்ற பெயரில் புதுக்கட்சி கண்டார்.

இப்போது ஜோசப் குரூப்பிலிருந்து விலக்கப்பட்டுள்ள டி.வி. ஏப்ரஹாம் என்பவர் 'கேரளா காங்கிரஸ் (ஏப்ரஹாம் குரூப்)' என்று புதுக்கட்சி ஆரம்பிக்கப் போவதாகச் செய்திகள் வெளியாகின்றன. இதைப் படித்த உங்களுக்கே இப்படித் தலை சுற்றுகிறது என்றால் கேரள மக்களின் நிலையை நினைத்துப் பாருங்கள்!

திருவனந்தபுரத்திலிருந்து :
எஸ்.எஸ். மணி

## மாதம் ஒரு தொகுதி



# கம்பம் தொகுதி மக்களே...

உங்கள் தொகுதியின் தேவைகள் என்ன? பிரச்னைகள் என்ன?

இதுவரை அரசு செய்யத் தவறியது என்னென்ன?

பிரச்னைகள் எதுவாக இருந்தாலும் எங்களுக்கு அவற்றைச் சுருக்கமாக எழுதியனுப்புங்கள். அவற்றை நாங்கள் நேரடியாக வந்து பார்க்கிறோம். பிறகு அவற்றையெல்லாம் உங்கள் தொகுதி எம்.எல்.ஏ.விடம் எடுத்துச் சொல்கிறோம். அவருடைய பதில்களையும் பெற்றுப் பிரசுரிக்கிறோம்.

உடனடியாக எழுதுங்கள்.

உங்கள் கடிதங்கள் எங்களுக்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: டிசம்பர் 8.

— ஆசிரியர்

"மூட்டாள்!" என்றான் ரங்கா, சென்னை திரும்பும் வழியில்.

"ஏன் ஹரி அப்படி செஞ்சே? உன் மனைவி தானே? திருடன் மாதிரி எதுக்கு ஓடி வந்தே? என்னவெல்லாம் நினைச்சிருக்கலாம்? யோசிச்சுப் பார்! எல்லா சிக்கல்களும் உன்னால்தான். உன்னால் மட்டும்தான்!"

என்னென்னவோ நினைத்து, வேறெதுவோ ஆகிவிட்டது. விதிவசத்தில் தான் இழுத்துக் கொண்டு போகப்படுவதாக அவன் நினைத்தான். இனி எந்தப் பிரயத்தனங்களுக்கும் அர்த்தம் இல்லை. சொந்த மனைவியின் கண் முன்னால் என் சிகரங்கள் வெடித்துச் சிதறி, வில்லிபுட் ஆகிவிட்டேன். என் மனத்தின் சாக்கடை நாற்றம், அவள் நாசிக்கு எட்டி விட்டது. கங்கையும் மானசரோவரும் ஒருக்காலும் கழுவ முடியாத பாவக் கறை.

"ரங்கா, என் நடவடிக்கைகள் எல்லாமே தப்புன்னு தெரியறது. ஆனால், தவிர்க்க முடியலைடா. நான் என் கட்டுப்பாடுகளை இழந்து கொண்டிருக்கிறேன். இனி எப்படி நான் ரஞ்சனியைப் பார்ப்பேன்? என் முகத்தில் பூஞ்சைக் காளான் தெரியலை? பார், நல்லா பார்!"

அவன் குலுங்கிக் கொண்டிருந்தான்.

"பைத்தியம் மாதிரி இருக்காதே ஹரி. இதெல்லாம் பாஸிங் க்ளவ்ட்ஸ்னு நினைச்சுக்கோ. ரஞ்சனி வந்ததும் உட்கார்ந்து பேசு. எவ்ரிதிங் வில் பி ஆல் ரைட்!"

**வீ**ட்டுக்குப் போனதும் அது மட்டும் தன்னால் முடியாது என்று அவன் நினைத்தான். இனி என்ன பேசி, என்ன ஆகப் போகிறது? தருணங்கள் கைநழுவி விட்டன. காவல் இருக்கிற தேவதைகள் ராஜினாமா செய்து விட்டன. கம்பீரமும் ஆண்மையும் காணாமல் போய்விட்டன. தான் ஒரு பெரிய சைபர் என்று அவனுக்குத் தோன்றியது.

பிரமை பிடித்தவன் மாதிரி, ஹாலின் ஒரு மூலையில் சரிந்து கிடந்தபோது போன் அடித்தது. ரங்காதான் பேசினான்.

"ஹரி, குளிச்சியா? சாப்டியா? பேசாமல் இங்கே கிளம்பி வந்துடறியா?"

அவனுக்கு எதுவும் பதில் பேசத் தோன்றவில்லை.

"நான் ஒரு ஐடியா சொல்லவா? எல்லாத்தையும் மறந்துட்டு, தனியா எங்காவது ஒரு வாரம் போயிட்டு வாயேன்? பெட்டர், ஸ்ரீரங்கம் போகலாம். உன் அப்பா, அம்மாவைப் பார்த்து, பேசி வரலாம் இல்லையா?"

அவனுக்கு துக்கம் பொங்கியது. அம்மா! அவளைப் பார்த்து எத்தனை நாளாகி விட்டது! இதமான தலை வருடலிலும் புன்னகையில் அரவணைத்துப் பொழிகிற பாசத்திலும் என்னவெல்லாம் ரசவாதம் செய்து விடுவாள்! எப்படி அந்த ஞாபகமே இல்லாமல் போய்விட்டது? தாங்க்ஸ் ரங்கா. சரியான யோசனை தந்திருக்கிறாய்.

# தேவேகௌடாவின் வாரிசு அரசியல்!

தேசிய அரசியலில் தமக்கு முக்கியத்துவம் கிடைக்காது என்று உணர்ந்து கொண்டு விட்ட சூழ்நிலையில், தேவேகௌடா ஒரு புதிய வியூகம் வகுக்கிறார்.

தமது மகன் குமாரசாமிக்கு, கர்நாடக மாநில அரசியலில் ஒரு பிரதான இடம் கிடைக்கச் செய்வதுதான் அந்தத் திட்டம். தமது சீடர் என்கிற காரணத்தால், ஜே.ஹெச். பட்டேலை தமக்கு அடுத்து கர்நாடகாவின் முதல்வராய்ப் பதவி ஏற்பதற்கு வழி செய்து கொடுத்தார் தேவேகௌடா என்றாலும், முதலமைச்சர் பொறுப்பை ஏற்றுக் கொண்டவுடன், படேல் தம்மை ஸ்திரப்படுத்திக் கொண்டு விட்டார்.

காங்கிரஸ், ஹெக்டேவின் புதிய கட்சி, ஜே.ஹெச். பட்டேல் மூன்று தரப்புகளையும் மீறி தமது மகன் குமாரசாமியை, கர்நாடக அரசியலில் ஒரு பெரிய சக்தியாய் வரச் செய்ய வேண்டும் என்பதே தேவேகௌடாவின் திட்டம்.

இதன் முதல் கட்டமாக, கர்நாடக சட்ட சபையில் உள்ள ஜனதா தளக் கட்சியைச் சேர்ந்த எம்.எல்.ஏக்கள் மத்தியில் தமக்குள்ள செல்வாக்கை, நாடி பிடித்துப் பார்க்கிற நோக்கத்துடன், கௌடா அண்மையில் ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். பெங்களூரை ஒட்டிய ஒரு விடுமுறை விடுதியில் இந்தக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

காலையில் சிற்றுண்டியுடன் தொடங்கி, பிற்பகல் மதிய உணவுடன் முடிந்த இந்தக் கூட்டத்தில் 60 ஜனதா தள எம்.எல்.ஏக்கள் கலந்து கொண்டனர்.

தற்போது பாராளுமன்ற உறுப்பினராக இருக்கிற குமாரசாமி, கர்நாடக மாநில வளர்ச்சிக்கான திட்டங்கள் குறித்து எம்.எல்.ஏக்களுடன் ஆலோசனை நடத்தினார். அதன் அடிப்படையில் மத்திய அரசுடன் பேசி, அவற்றைச் செயல்படுத்தும் எண்ணத்தின் முன்னோடி நடவடிக்கைதான் இது என்று எம்.எல்.ஏக்களுக்குச் சொல்லப்பட்டது.

எம்.எல்.ஏக்களுடன் நேரிடையாகப் பேசி, கூட்டத்துக்கு அவர்களை வரவழைக்கும் பணியை குமாரசாமியும் அவருக்கு நெருக்கமான இரு எம்.எல்.ஏக்களும் செய்ததாகக் கூறப்படுகிறது. இந்தக் கூட்டம் பற்றி, கர்நாடக முதல்வர் பட்டேலுக்குத் தெரியும் என்றாலும் அவர் அதில் கலந்து கொள்ளவும் இல்லை; தமது எம்.எல்.ஏக்களுக்கு இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளக் கூடாது என்று தடை விதிக்கவும் இல்லை!

ஆனால், கூட்டத்தில் கலந்து கொண்ட எம்.எல்.ஏக்கள் பலருக்கும், கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டதன் உண்மையான நோக்கம் புரிந்து விட்டது. கூட்டத்தில், கர்நாடக முதல்வரை விமர்சனம் செய்து சிலர் பேசியது இதற்கு அத்தாட்சி.

எம்.எல்.ஏக்கள் மத்தியில் பட்டேலின் எதிர் நடவடிக்கை என்னவாக இருக்கும் என்ற பேச்சும் கிளம்பியுள்ளது. 'அப்பர் கிருஷ்ணா புராஜக்ட்' என்ற திட்டத்தில், தமக்கு வேண்டியவர்களுக்குக் (கர்நாடக முதலமைச்சராக இருந்தபோது) தேவேகௌடா 350 கோடி ரூபாய் மதிப்புக்கு காண்ட்ராக்டுகள் வழங்கியிருக்கிறாராம். அதைப் பற்றி ஒரு விசாரணைக் கமிஷனுக்கு உத்தரவு இட்டு விடுவாராம் பட்டேல்.

- கௌதம்



அன்புள்ள ரஞ்சனி, ஒரு மாறுதலுக்காகக் கொஞ்ச நாள் வெளியூர் போகிறேன். காரணங்களை உனக்கு விளக்க வேண்டாம் என்றே நினைக்கிறேன். நீ அறியாததல்ல. மௌனமாய் இருப்பதென்பதற்கு ஏதும் அறியாமல் இருப்பதாக அர்த்தம் அல்லவே? வருகிறேன்.

மனத்தில் ஓடிய வரிகளைத் தாளில் இழுத்து நிறுத்திவிட்டுக் கதவைப் பூட்டிக் கொண்டு புறப்பட்டான். முன்னதாக, ப்ரொட்யூசருக்கு போன் செய்து, வேலைகளை ஒரு வாரம் ஒத்தி வைக்கச் சொல்லியிருந்தான்.

அம்மா. அவளிடம் சொல்ல வேண்டும். எல்லாவற்றையும். கூடுதல் அனுபவத்தில் வாழ்வின் வேறு பல பரிமாணங்களை அவள் விரித்துக் காட்டக்கூடும். கிழச்சித்திரை வீதியில் போதிமரம் நிழல் கவித்துக் காத்திருக்கிறது. திரும்பி வரும்போது முற்றிலும் மாறுபட்ட இன்னொரு முகமும் மனமும் ஒருவேளை வாய்க்கலாம்.

காரை எடுத்துக் கிளம்பியபோது, கண்களில் நீர்த்திரை கோத்து, வழியை மறைத்தது.

(தொடரும்)

உழைப்பவனே மிகச் சிறப்பானவன்
சேமிப்பவனே சிறந்த லட்சியங்களை
அடைகிறான் !

இன்றே சேமியுங்கள்

சிட்டி யூனியன் வங்கியில்




சிட்டி யூனியன் வங்கி லிட்.,
பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001.
(அந்நியச் செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி)

CUB - உங்கள் வளர்ச்சிக்கு வழிகாட்டும் வங்கி !

சமைப்பது கஷ்டமா ? யார் சொன்னது ?

"கல்யாணமாகி மூன்றே மாதங்களில் சமைப்பதில் நான் எக்ஸ்பர்ட் ஆகிவிட்டேனாம். எல்லோரும் ஆச்சரியப்படுகிறார்கள்.

'கொஞ்சம் வெயிட் போட்டுட்டேன், இல்லே'ன்னு அவரும்கூட வெட்கத்துடன் கேட்கிறார்.

நான் பயந்த மாதிரி சமைப்பது கஷ்டமே இல்ல. SMB இருந்தால் போதும்; எல்லாமே எளிது. எனக்கு மட்டுமில்லை; உங்களுக்கும்தான்"

SMB ரவை, மைதா, கோதுமை மாவுகள். தரமானவை. சுவையானவை. ஆரோக்கியமானவை. சமைக்கவும் எளிதானவை."

SMB






தயாரிப்பாளர்கள் :
சக்தி முருகன் ரோலர் ப்ளவர் மில்ஸ் பி. லிட்.
தபால் பெட்டி எண். 15, அவினாசி - 641 654,
கோவை மாவட்டம், போன் : 52991, 52992, 52993, 52994

# 'சைனாவைப் பாருங்க, சிதம்பரம்!'



மனித உரிமை மீறலுக்காக அவ்வப்போது குட்டு வாங்கினாலும் சைனா, பொருளாதார வளர்ச்சிக்காக 'ஷொட்டு' (அதான் முதுகில் செல்லமாகத் தட்டுவது) வாங்கியிருக்கிறது. உலக வங்கித் தலைவர் ஜேம்ஸ் வுல்ஃபென்ஸன் சைனாவை தாராளமாகப் புகழ்ந்து தள்ளியிருக்கிறார்.

கடந்த பத்து - பதினைந்து ஆண்டுகளில் சைனாவின் சுமார் 200 மில்லியன் மக்கள் பரிபூரண ஏழைமையிலிருந்து விடுவிக்கப்பட்டு உயர்ந்திருக்கிறார்கள். உலக அரங்கிலும் சைனாவுக்கு நல்ல பெயர். ஏற்றுமதிகள் அதிகரித்துள்ளதால் வளர்ந்த நாடுகளுக்கு இணையாக சைனா போட்டி போடுகிறது. பொருளாதார முன்னேற்றத்தால் அங்கு நுகர்வோர் எண்ணிக்கையும் பெருகியிருக்கிறது. அதனால் பிற நாடுகள் சைனாவில் தொழில் தொடங்கவும் வர்த்தகம் நடத்தவும் ஆவலுடன் முன்வருகின்றன.

''இத்தனை முன்னேற்றம் இருந்தாலும் சைனா இன்னமும் ஏழை நாடுதான்'' என்கிறார் வுல்ஃபென்ஸன். ''ஏழை - பணக்காரரிடையே அங்கு நிலவுகிற இடைவெளி இன்னமும் மிகப் பெரிதாகவே இருக்கிறது. இத்தனையையும் மீறி அந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சி எல்லோரையும் நிமிர்ந்து உட்காரச் செய்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம் இருக்கிறது...'' என்கிறார் வுல்ஃபென்ஸன்.

அவர் குறிப்பிடும் காரணங்கள் : அரசியல் ஸ்திரத்தன்மை, பொருளாதார சீர்திருத்தங்கள், மிகப் பெரிய உள்நாட்டுச் சந்தை, மக்களின் சேமிப்புத் தொகை கண்டுள்ள வளர்ச்சி.

கடந்த பத்து வருடங்களாக சைனாவின் வருடாந்திர மொத்த உற்பத்தி அதிகரிப்பு (Gross Domestic Product) சராசரி பன்னிரண்டு சதவிகிதமாக இருந்து வருகிறது. நமது நாட்டின் ஜிடிபி வளர்ச்சியோ ஏழு சதவிகிதம்தான். அதையும் கடந்த இரண்டு ஆண்டுகளாக தாராளமயமாக்கல் அறிமுகமான பிறகுதான் எய்த முடிந்திருக்கிறது. இந்த ஆண்டு நமது GDP ஆறு சதவிகிதம்தான் உயரும் என்று கணக்கிடுகிறார்கள் நிபுணர்கள்.

இந்தியாவுக்கும் சைனாவுக்குமிடையே சில ஒற்றுமைகள் உண்டு. இரண்டுமே மிக அதிகமான ஜனத்தொகையுடைய நாடுகள். சைனாவின் தற்போதைய ஜனத்தொகை 120 கோடி; இந்தியா நூறு கோடியை நெருங்குகிறது. சுமார் பத்தாண்டுகள் முன்பு வரை இரு நாடுகளுமே பரம ஏழை நாடுகளாயிருந்தன. நமது ஜனநாயக ஆட்சி முறைக்கு மாறாக அங்கு கம்யூனிஸ்ட் ஆட்சி. ஆனால் சைனா தான் நமக்கு முன்னதாக விழிப்படைந்து பொருளாதார சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தது. அந்நிய முதலீடுகளுக்கு வழிசெய்து, வளர்ச்சிக்கு வித்திட்டது. இதே வேகத்தில் போனால், சைனா வளர்ந்த நாடுகள் பட்டியலில் சீக்கிரமே இடம்பிடித்து விடும்; இந்தியாவோ இருக்கிற இடத்திலேயே தொடர்ந்து இருக்கும்.

சைனாவிடமிருந்து நமது நிர்வாகிகளும் தொழில்துறையினரும் நிறைய பாடம் கற்க வேண்டியிருக்கிறது.

முன்னேற்றத்துக்கான முயற்சிகளை நமது நிதியமைச்சர் எடுக்காமலில்லை. சமீபத்தில் கூட, தேசியமயமான வங்கிகளுக்குக் கூடுதல் சுதந்தரம் அறிவித்திருக்கிறார் அவர். இதனால் இரவோடிரவாக எல்லா வங்கிகளும் வளர்ந்து விடப் போவதில்லை. எனினும் அரசாங்கக் கட்டுப்பாட்டைத் தளர்த்துவதென்பதே நம் நாட்டைப் பொறுத்தவரை ஒரு வரவேற்க வேண்டிய மாற்றம். பொதுத் துறை நிறுவனங்களின் இயக்கத்துக்கு இத்தகைய சுதந்தரத்தைத் தொழில் அமைச்சர் கொடுத்தார்; இப்போது நிதியமைச்சர் தமது பங்குக்கு வங்கிகளின் இயக்கத்தை எளிமையாக்கி புண்ணியம் கட்டிக் கொண்டிருக்கிறார்.

— வி. கோபாலன்

* ஒத்த ரூபா ஜாலம்
உதவும் ஒரு காலம்.
இப்ப கோர்ட்டு
செலவுக்கென்ன மாயம்?









* ராணி வந்த ஜோரு
'மருத'க்காரன் பேரு
ரவுண்டடிக்குது, ஊருமுழுக்கப்
பாரு!



# கார்ட்டூன் கிவிதைகள்!

- டெல்லிக்கார வேஷம்
போட்டுப் பார்த்தாலாச்சும்
காவிரிக்கு வருமா கதி
மோட்சம்?



- நிபந்தனைகள் ஏனுங்க?
நிம்மதியா இருக்க உட்டா
உருப்படியா நிக்குமில்ல
கூட்டு?



- பாட்டுக்கார அண்ணாச்சி!
பழைய சரக்கு என்னாச்சி?
வேசம் மாத்தி வாங்க, இங்கே
ஒன் டே மேட்ச்.

கிவிதை : குரோம்பேட்டை கவிராயர்

கார்ட்டூன்கள் : அனந்து

# சந்தோஷ ஊற்றை மூடி வைக்காதீர்கள்!



சில பேரைப் பாருங்கள், எப்போது பார்த்தாலும் பளிச்சென்று இருப்பார்கள். அவர்கள் நன்றாக சோப்புப் போட்டுத் தேய்த்து முகம் கழுவி, பவுடரெல்லாம் போட்டிருக்கிறார்கள்; அதனால்தான் பளிச்சென்று இருக்கிறார்கள் என்பதில்லை. அப்படிப்பட்டவர்களின் முகம் வேலை செய்து களைத்த நிலையிலும் கூட பளிச்சென்றுதான் இருக்கும். அவர்களின் உதடுகள் மட்டும்தான் சிரிக்கும் என்பதில்லை; கண்களும் சேர்ந்து சிரிக்கும். இத்தனை ஏன்? ஒட்டுமொத்த முகமே சேர்ந்து சிரிக்கும்.

இப்படிப்பட்டவர்களைத்தான் யதார்த்தத்தில் நல்ல 'களை'யாக இருக்கிறார்கள் என்று சொல்லுகிறோம். "பொண்ணு பெரிய அழகுன்னோ நல்ல நிறம்னோ சொல்ல முடியாது. ஆனால் முகம் நல்ல களையா... லட்சுமிகரமா இருக்கு!" என்று சொல்லுகிறோமே, அது இப்படிப்பட்டவர்களைத்தான்!

"இன்னிக்குக் காலைல ஒரு நல்ல காரியமாப் புறப்பட்டுப் போனேன். புறப்பட்டுப் போகும்போது அந்த நபர் முகத்திலதான் முழிச்சிட்டுப் போனேன். போன காரியம் அபார சக்கஸ்!" என்று நடைமுறை வாழ்க்கையில் நிறையப் பேர் சொல்லுவது வாடிக்கையான விஷயம்தான்!

அந்த நபர் முகத்தில் 'விழித்து'விட்டுப் போனதில் அப்படியென்னதான் விசேஷம்? அந்த நபர் ஏற்கெனவே நல்ல களையான முகத்தோடு இருப்பவர். இவர் ஒரு நல்ல காரியமாகப் போவதால் ஒரு சந்தோஷ மன நிலையில் புறப்பட்டுப் போனார். வழியில் அந்த நபரின் களையான முகத்தைப் பார்த்தபோது, இவரது சந்தோஷத்தை அது மேலும் கூடச் செய்தது. சந்தோஷக் குவியலோடு இவர் போனதால், போன இடத்திலும் இவரது சந்தோஷ மனநிலை மற்றவர்களிடம் தொற்றிக் கொள்ள.. பேச்சு வார்த்தைகள், கொடுக்கல், - வாங்கல்கள் எல்லாமே சுமுகமாக முடிந்து போனது. இதுதான் விஷயம்!



ஆக, சந்தோஷ மன நிலையோடு - சிரித்த முகத்தோடு இருப்பவர்கள், அவர்கள் மாத்திரமே சந்தோஷ மனநிலையில் இருப்பதில்லை. பார்க்கிற மற்றவர்களையும் சந்தோஷமான மன நிலைக்கு மாற்றி விடுகிறார்கள். அதனாலேயே அவர்களை எல்லோருக்கும் பிடிக்கிறது. காலையில் அவர்கள் முகத்தில் விழிப்பது கூடத் தங்களுக்கு ஓர் அதிர்ஷ்டம் என்று நினைக்கிறார்கள்!

இப்படி ஒரு சிலரால் மட்டும்தான் எப்போதும் சந்தோஷமாக இருக்க முடியுமா? ஒரு சிலரால் மட்டும்தான் தம்மைச் சுற்றியுள்ளவர்களிடமும் சந்தோஷ மனநிலையைப் பரப்ப முடியுமா? எல்லோராலுமே அப்படி இருக்க முடியாதா? நிச்சயமாக முடியும்.

# உணர்வுகள்; உறவுகள்



உண்மையைச் சொன்னால், சந்தோஷம் என்பது ஓர் ஊற்று மாதிரி. அது எல்லோருக்குள்ளும் பொங்கிப் பிரவகிக்கக் காத்துக் கொண்டுதான் இருக்கிறது. ஆனாலும் நம்மிடம் அப்படிப் பொங்கிப் பிரவகிக்கவில்லையே என்கிறீர்களா? நிஜம்தான்!

காரணம் என்ன தெரியுமா? பொங்கிப் பிரவகிக்கும் அந்த சந்தோஷ ஊற்றை நாம்தான் போட்டு மூடிவைத்திருக்கிறோம். எதனால்? கோபம், வெறுப்பு, பொறாமை, வயித்தெரிச்சல், தோல்வி போன்ற நெகடிவ் உணர்ச்சிகள்தான் சந்தோஷத்தின் எதிரி. இந்த நெகடிவ் உணர்ச்சிகள் நம்மிடம் இருப்பதால்தான் இயல்பாகப் பொங்கிப் பிரவகிக்கக் காத்திருக்கும் சந்தோஷ ஊற்று மூடிக்கிடக்கிறது. இந்த நெகடிவ் உணர்வுகளையெல்லாம் தூக்கித் தூரப் போடுங்கள்; அடுத்த கணமே நம்மிடமுள்ள சந்தோஷ ஊற்று பீறிட்டுக் கிளம்ப ஆரம்பித்து விடும்!

எல்லாம் சரி, நாளை பற்றிய ஏகப்பட்ட கவலைகள் இருக்கும்போது, எப்படி அந்தக் கவலைகளைத் தூக்கியெறிந்து விட்டு சந்தோஷமாக இருக்க முடியும்?

நாளைய பிரச்னைகளைச் சமாளிப்பதற்குக் கவலைகள் உதவவே உதவாது. பிரச்னை என்னவென்று வகைப்படுத்தி, கொஞ்சம் நேரம் ஒதுக்கி யோசித்தால் தீர்வு புலப்படும். இப்படி யோசிப்பதை பழக்கமாக்கிக் கொண்டால் மீதி நேரம் மகிழ்ச்சி குன்றாது. "பிரச்னைகளை எதிர் கொள்வதற்குத் தன்னம்பிக்கையும் தைரியமும்தான் தேவை. இது இல்லாத போதுதான் கவலை வருகிறது. இந்தக் கவலைதான் சந்தோஷத்தை மறைத்து விடுகிறது. தன்னம்பிக்கை இருக்கிறபோது சந்தோஷ ஊற்று பாதிக்கப்படுவதில்லை!

இன்னும் சொல்லப் போனால், நம்மிடமிருக்கிற பெரும்பாலான கவலைகள், பிறருடைய வாழ்க்கையை நம் வாழ்க்கையோடு ஒப்பிட்டுப் பார்ப்பதால் வருபவைதான்! அவன் எப்படியெப்படியெல்லாமோ இருக்கிறான்.. நம்மால் இப்படிக் கூட இருக்க முடியவில்லையே என்கிற பொறாமையால் வருகிற கவலைகள்தான்!

ஒருவரைப் போல் இன்னொருவர் இருக்க முடியாது. அப்படியிருந்தால் அது ஜடப் பொருள்களாகத்தான் இருக்க முடியும். மெஷின்கள் உற்பத்தி செய்கிற பொருள்கள்தான் ஒன்றைப் போலவே மற்றதும் இருக்கும்.

நாம் மனிதர்கள். நம் ஒவ்வொருவருக்கென்றும் ஒவ்வொரு தனித்தன்மை இருக்கிறது. இந்தத் தனித்தன்மைதான் நம்மை நாமாகவே அடையாளம் காட்டுகிறது. அவரைப் போலவே நாம் இருந்தால் அப்புறம் நாம் எதற்கு? இந்த ஒப்பீட்டு உணர்வு போக வேண்டுமானால் அதற்குத் தன்னம்பிக்கை அவசியம். தன்னம்பிக்கை இருந்துவிட்டால் நெகடிவ் உணர்வுகள் வராது. நெகடிவ் உணர்வுகள் வராவிட்டால் இயற்கையாகவே சந்தோஷ உணர்வு பீறிட்டுக் கிளம்புவதற்கு எந்தவிதமான தடையும் இருக்காது.

இந்த நெகடிவ் உணர்வுகளைத் தூக்கியெறியாமல், 'நான் போகாத கோயிலில்லை; வேண்டாத தெய்வமில்லை. ஆனாலும் எனக்கு சந்தோஷமே இல்லை!' என்று புலம்பிப் பயனில்லை. கோயிலுக்குப் போவதென்பதும் நம்மிடமிருக்கிற நெகடிவ் உணர்வுகளைத் தூக்கியெறிவதற்குத்தான்.

எனவே, நம்மிடம் இருக்கிற எல்லா விதமான நெகடிவ் உணர்வுகளையும் தூக்கித் தூர எறிய வேண்டும். தன்னம்பிக்கை கொள்ள வேண்டும். அப்புறம் பாருங்கள், சந்தோஷம் சந்தோஷம் சந்தோஷம்தான்!

**டாக்டர் எஸ். விஜயகுமார்**



# பொற்காலம்

கற்கால 'தீம்'தான் – அண்ணன் தங்கை பாசம். ஆனால் சாமர்த்தியமாகக் கொண்டு போயிருக்கிறார் சேரன்.

நாயகன் முரளி. 'முழுப் படத்திலும் பரிதாபம். முக்கால் வாசி நேரம் சோகம்' இது போன்ற ரோலில் எந்தக் கதாநாயகனால் பிரகாசிக்க முடியும்? ஒரு ஹீரோ தமது கண்களில் அடிக்கடி குளம் வெட்டிக் கொள்வதை வெகு நாட்களுக்குப் பிறகு பார்க்கிறோம். என்றாலும் பொருத்தமான சம்பவங்கள் என்பதால் எரிச்சல் வரவில்லை. ஆனால் ஊராரின் மன ஊனத்துக்கு முன் தங்கையின் உடற்குறை ஓர் ஊனமே அல்ல என்று ஒரு நீ...ண்...ட வசனத்தை முரளி பொங்கிப் பொருமிப் பேசும் போது நாமும் பொருமுகிறோம் – 'மெஸேஜ்' என்ற பேரில் இப்படி நம்மை அவஸ்தைப்படுத்துகிறார்களே என்று.

பானை செய்யும் முரளியும், பாவு நெய்யும் மீனாவும் கண்ணாலும், மனத்தாலும் மட்டுமே பேசி வளர்த்துக் கொள்ளும் காதல் ஜில் இதம். வழக்கமான டூயட்டாக இல்லாமல் காதலியை பொம்மைகளாக வடிவமைக்கும் நாயகனின் பாடல் ஷாட்களில் புதுமை தெரிகிறது.

தமது ஒருதலைக் காதல் முறிந்ததும் சங்கவி அடுத்த ஜென்மத்தில் முரளி தமது கணவனாக இல்லாவிட்டாலும் அண்ணனாகவாவது வரவேண்டும் என்று கூறுவதும், ''உனக்குப் பிடிக்கலேன்னா நான் என் காதலை விட்டுடறேன்'' என்று முரளி கூறுவதும் கதையின் மைய இழைக்கு வலு.

ஊமைத் தங்கையாக வருபவர் தமது வசனத்தை முகபாவங்களின் மூலமே நன்கு பேசுகிறார்.

தேவையில்லாதது வடிவேலுவின் பாத்திரம் மற்றும் அவர் பாடும் 'ஞானப்' பாடல்.

கதை முடிவுக்கு வந்த பிறகும் காட்சிகள் சாங்கோபாங்கமாகத் தொடர்கின்றன. இருந்தும் பெரும்பான்மை ரசிகர்கள் கலையாமல் இருக்கக் காரணம், சம்பவங்களில் விறுவிறுப்பு குறைவு என்றபோதிலும் கதையமைப்பில் காணப்படும் நேர்மை.

— ஜி.

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621**
**Annual Subscription : India Rs. 208/-; Overseas Rs. 1200/- (Air Mail)**
**Half Yearly Subscription : India Rs. 104/-; Overseas Rs. 600/- (Air Mail)**

# KVB- யின் பஞ்சரத்னா.

## உங்கள் வாழ்வை ஒவ்வொரு நாளும் ஐந்து வழிகளில் ஒளிமயமாக்குகிறது.

KVB- யின் "பஞ்சரத்னா" டெபாசிட் திட்டத்தின் ஐந்து சிறப்பு அம்சங்கள் • உங்கள் டெபாசிட் யூனிட்டுகளாக கணக்கில் வைக்கப்படும் • தேவைக் கேற்ப யூனிட்டுகளின் பகுதிகளைத் திரும்பப் பெறலாம் • முதிர்வு காலத்திற்கு முன்பே பெறப்படும் யூனிட்டுகளுக்கும் வங்கி விதிமுறைப்படி வட்டி அளிக்கப் படும் • மீதமுள்ள யூனிட்களுக்கு உரிய வட்டி தரப்படும் • "பஞ்சரத்னா" டெபாசிட் திட்டச் சான்றிதழை கடனுதவிக்கு ஈடாகக் கொடுக்கலாம் • KVB- யின் "பஞ்சரத்னா" இதற்கு முன் என்றும் கண்டிராத ஒளியை உங்கள் வாழ்வில் தருகிறது.




Since 1916

**KARUR VYSYA BANK LTD.**

Regd. & Central Office : KARUR - 639 002.

நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி

இத்திட்டம் குறிப்பிட்ட கிளைகளில் மட்டுமே செயல்படுகிறது. மேலும் விபரங்களுக்கு எங்கள் கிளை அலுவலர்களை அணுகவும்

A.D. Navaneethan
Chairman

Pratibha Cbe KVB 97

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka


இந்தியாவின் மிகப் பெரிய கடைகள்

# சரவணா ஸ்டோர்ஸ்

தங்கநகைகள் ✧ பட்டு ஜவுளிகள் ✧ பாத்திரங்கள்

ரெங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை-17.

## தங்க, வெள்ளி நகைகளுக்கு செய்கூலி இல்லை

பழைய பொன் நகைகளை கொடுத்து புன்னகையோடு புதிய பொன் நகை பெறவும்.

22 ct. தங்கம்
1 கிராம் ரூ.411
(விலை மாற்றம் உண்டு)

நாங்கள் விற்கும் தங்க நகைகள் மற்ற எந்த கடைகளையும் விட உயர்வான தரம் என்று சவால் விட்டு உறுதி கூறுகிறோம்.



பட்டு
புடவைகளுக்கு
10% தள்ளுபடி

ஜவுளிகள்,
ரெடிமேட் ஆடைகள்,
பாத்திரங்கள், டி.வி.
ரேடியோ, ஃபிரிஜ், ஃபேன்

WE ACCEPT VISA, MASTER CARDS ONLY

ஞாயிறு விற்பனை உண்டு

L.R.SWAMI / P.P.